# சகுந்தலை வெண்பா



இலங்கை முன்னாள் அமைச்சர்
சு. நடேச பிள்ளை இயற்றியது



இராமநாதன் கழகம்,
சுன்னாகம், இலங்கை.

1963

# சகுந்தலை வெண்பா



இலங்கை முன்னாள் அமைச்சர்
சு. நடேச பிள்ளை இயற்றியது

இராமநாதன் கழகம்,
சுன்னுகம், இலங்கை.

1963

 [விலை ரூபா 2-50

# முகவுரை

முப்பது ஆண்டுகளுக்கு முன் ''சகுந்தலை வெண்பா'' என்ற இச்சிறு காப்பியத்தை இயற்றத் தொடங்கினேன். அக்காலத்தில் யாழ்ப்பாணத்தில் தோன்றிய ''ஞாயிறு'' என்ற பத்திரிகையில் இதன் முதற்பகுதி வெளிவந்தது. அதன் பின்னர் யான் அரசியற் கடமைகளில் ஈடுபட்டிருந்த காலத்தில் இம்முயற்சி தடைப்பட்டு நின்றது. அவற்றினின்று யான் ஒய்வு பெற்ற பிறகு இதனை மீண்டும் தொடர்ந்து முடிப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தது.

இச்சிறு காப்பியத்தின் கதைப்போக்கு வடமொழியில் காளிதாச மகாகவி இயற்றிய சகுந்தலை நாடகத்தைப் பெரும்பாலும் தழுவியதாகும். அக்கவிஞருடைய விழுமிய கருத்துக்கள் இதில் ஆங்காங்குப் பொன்னேபோற் போற்றப்பட்டுள்ளன. எனது கற்பனையாக அமைந்த பகுதிகளும் இதிற் காணப்படும்.

இதற்கு முன்னுரை எழுதியுதவிய பேராசிரியர், திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரன் அவர்களுக்கு எனது நன்றி உரியதாகும்.

சு. நடேசபிள்ளை

''இராமநாதனகம்''
சுன்னாகம், இலங்கை.

*16-10-1962.*

# முன்னுரை

உலகில் வழங்கும் பழங்கதைகள் மனிதன் நினைவைவிட்டு அகல்வதில்லை. அவனுடைய உள்ளத்தின் ஆழத்தில் எழுகின்ற எண்ணங்கள் கொள்கின்ற கோலங்களே இந்தக் கதைகள். உலகினைப் பற்றியும், மக்களைப் பற்றியும் எழுகின்ற பல குழப் பங்களை — சிக்கல்களை ஒருவகையாகத் தீர்க்க முயலும் வகையில் அவன் காண்கின்ற காட்சிகளே இவையெல்லாம். சொல்லால் விளக்க முடியாத உணர்ச்சி வடிவான கருத்துக்களை, அவனு டைய கற்பனை இவ்வாறு கதை வடிவமாகக் கண்டு விளக்கு கிறது. கனவு போன்றிருக்கும் இக்கதைகளின் பொருளை நேரே சொற்களால் இன்றும் நாம் விளக்குதற்கில்லை. ஆனால் ஏதோ ஓர் ஆறுதலைத் தரும் விளக்கத்தை மனிதனுடைய மனம் அங்கே காண்கிறது. அதனால் அக்கதைகளைத் தலைமுறை தலைமுறையா கச் சிறுவரும், கிழவரும், ஆண்களும், அரசர்களும், துறவிகளும் ஈடுபாடுடன் சொல்லி வருகின்றனர்; தத்தமக்கேற்ற பொரு ளைக் கூறிவருகின்றனர்.

அத்தகைய கதைகள் இந்திய நாட்டில் ஒருங்கு சேர்ந்து கதைகளாகவும், கிளைக் கதைகளாகவும் தலைமுறை தலைமுறை யாக வளர்ந்து வருகின்றன. அந்தக் கதைப் புதையலுக்குப் பாரதம் என்று பெயரிட்டு வழங்கி வருகிறோம். அதிலே வருகிற கிளைக் கதை ஒன்று உலகப் பெருமை பெற்று விட்டது. சகுந்தலை

யின் கதை காளிதாசனுடைய உள்ளத்தினைக் கவர்ந்தது. காத லில் எழும் மேடு பள்ளங்கள், விதியின் விளையாட்டு, பெண் ணின் பெருமை, வீரத்தின் வெற்றி, இந்திய நாட்டிற்குப் பெயர் தரத்தக்க தலைவன் ஒருவன் உருவாகும் வளர்ச்சி, முனி வர் வாழ்க்கையின் பலவகைப் போக்கு, அம்முனிவருலகில் வளரும் காதல், இயற்கையோடியைந்த வாழ்வு — இவையனைத் தையும் இக்கதையின் வழியே ஓர் ஒருமைக் காட்சியாகக் காண் கிறார் காளிதாசர். அவர் கண்ட வாழ்வின் விளக்கமாக ஒரு நாடகம் எழுதுகின்றார். செர்மணியக் கவிஞர் கத்தே (Goethe) போன்றாரின் உள்ளத்தையெல்லாம் கவர்கின்றது இந்நாடகம்.

இந்தக் கதையை இன்றைய உலகமும் கற்று மகிழ்கிறது. உலகம் மாறிவருவதற்கேற்ப இத்தகைய கதைகளின் பொரு ளும் மாறுகிறது போலும். அவ்வக் காலத்தே எழும் கேள்வி களுக்கு அவ்வக் கவிஞர்கள் காணும் விடையை இக்கதைகள் வழியாக விளக்கிவிடுகின்றனர். இன்று நண்பர், திரு. நடேசன் அவர்கள் சகுந்தலையின் கதையைத் தமிழிற் பாடித் தருகின்றார். மேனாட்டையும் அறிந்து அந்தப் புது ஒளியிலே நம் இந்து சமயப் பண்பாட்டைக் கண்டு களிக்கும் பேற்றினை எல்லோர்க் கும் வழங்கிய குடும்பம் ஒன்று உண்டு. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் இந்த விளக்கம் கண்டு வாழ்ந்து பிறருக்கும் வாழ வழி காட்டி ஒரு புதிய பண்பாட்டினை உலகில் இக்குடும்பத்தி னர் நிலைநாட்டினர். ஆனந்தகுமாரசாமி, சர் பி. அருணாசலம், சர் பி. இராமநாதன் முதலியோர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த வர்களானாலும், அவர்கள் இந்த வகையில் ஆற்றிய தொண் டினை இந்தியாவும், சிறப்பாகத் தமிழ் நாடும் மறக்கமுடியாது சேய் நாட்டிற்கும், தாய் நாட்டிற்கும் உள்ள தொடர்பு மேலும் ஓங்கும் வாய்ப்பு வந்தது. இராமநாதனார் தமது ஞான குருவின்

குடியில் வந்த நடேசனுரையே மருமகனுகப் பெற்ருர். நடேச ஞர் இலங்கை அரசியல் வாழ்விலும், பண்பாட்டு வாழ்விலும் தலைசிறந்து வாழ்ந்ததோடு சிறந்த தமிழ்க் கலைப்பணியும் செய்துகொண்டே வருகிருர். இவர் முயற்சியினுல் இராமநாத ஞர் கண்ட கல்லூரிகள், பல்கலைக்கழகமாக வளரப்போவதை யறிந்து மகிழ்கின்ரேும். இத்தகைய பண்பாட்டின் இலக்கியக் கலை விளக்கமே நடேசனுர் தரும் சகுந்தலை வெண்பா.

காளிதாசன் நாடகமாகப் பாடியதை நண்பர் சிறு காப் பியமாகப் பாடுகின்ருர். ஆதலின் கதையை இடையிலிருந்து தொடங்காமல் முதலிலிருந்தே சொல்லிப்போகின்ருர். இங்கே இவர்க்கு நளவெண்பா நினைவுக்கு வருவது இயல்பேயாம். அத னைப் போலவே தம் நூலையும் காண்டம் காண்டமாகப் பிரிக் கின்ருர்; வெண்பாவிலும் எழுதுகின்ருர். வெண்பா செப்பலோ சையுடையது. இது பாட்டேயானுலும் பேசும் பேச்சுப்போ லமையும் சிறப்பும் உடையது. பாடுவதுபோலன்றிக் கூறுவது போலப் பாட்டைப் படிப்பதும் உண்டு. ஆங்கிலப் பாக்களை இவ்வாறு படித்துப் பழகும் இந்த நாளில் இது காரணமாக வெண்பா நடை பல பாவாணர்கட்குப் பிடித்தமாகிறது. சங்க காலத்திலும் அதற்குப் பின்னும் வளர்ந்த வெண்பா நடை வேறு; புகழேந்தி வளர்த்த வெண்பா நடை வேறு. புகழேந்தி யின் நடையில் கலியோசை மிக்கு வருவதனுலும், பெரும் பான் மையும் வெண்சீரே வருவதாலும், நிறையச் சொல்வதற்கும் இடமுண்டு; நம்மையுமறியாமல் பாடிப்படிக்கவும் இடமுண்டு. இந்நாளில் எழுந்த அகலிகை வெண்பா, பாரி வெண்பா முதலி யன நினைவுக்கு வரலாம்.

ஆதலின் நண்பர் புதிய காப்பியத்தைத் தந்தாலும் பழைய கதையினையும், பழைய புலவர்களையும், பழைய நடையினையும்,

பழைய பாவினையும், வாழவைக்கின்ருர். கம்பனும் புகழேந்தி யும் தம் வள்ளல்களுக்கும், தம் காப்பியங்களில் நிலையான இடந்தந்தனர். அவ்வாறே நண்பர், இராமநாதருக்கும் இக்காப் பியத்தில் இடந்தருகின்ருர். புதிய காப்பியம் எழுதினுலும், இங்குக் கூறியவற்றின் காரணமாக ஏதோ ஒரு பழங்காப்பியத் தைப்பதிப்பிப்பது போன்ற எண்ணத்தை நம் மனத்துள் வளர்த்துவிடுகின்ருர். புகழேந்தியின் நடையிலே அவ்வளவு தொலைவு ஊறிப்பழுத்துள்ளார் எனலாம்.

வாழ்க சகுந்தலை வெண்பா ! வாழ்க சகுந்தலை ! வாழ்க நடேசனுர் ! வாழ்க ஒருமைப் பண்பாடு!

தெ. பொ. மீனுட்சிசுந்தரன்

உ

## சமர்ப்பணம்

சான்றோர் கவியியற்றித் தந்த இலக்கியங்கள்
ஆன்ற அணிகலன்க ளென்றணிந்தாய்—வான்றோய்
புகழ்பரந்த செந்தமிழ்த்தா யென்கவியின் புன்மை
இகழாம லேற்றருள்க இன்று

உ

# சகுந்தலை வெண்பா



## பிறப்புக் காண்டம்

பொன்னுலகின் கோவிருந்த பூந்தவிசின் முன்பணிந்து
மின்னற் கொடியனைய மேனகை—தன்னிகரில்
தேவர்க் கிறைவாழி தேரே னருள்கென்றாள்
ஏவற் குறிப்பெற் கிசைந்து. 1

கற்பகத்தின் மிக்கநற் காரிகையே யின்றெனக்
குற்ற திகிலொன் றுரைப்பன்கேள்—முற்றற்
கரிய கடுந்தவத்தை யாற்றினன் பாரிற்
பெரிய முனிகோ சிகன். 2

இமையவர்தம் வேந்தாக யானுகரு மிவ்வாழ்
வமையா தெனக்கிவ் வகலுட்—சமனுக
வேட்டா ருளரேல்வை வேற்கண்ணாய் நீயறிய
மாட்டாயோ கூறாய் மதி. 3

மன்ன னுரைத்தவிம் மாற்றத்தைக் கேட்டவன்றன்
முன்னம் முழுதுணர்ந்த மேனகைநன்—குன்னி
மிழற்றுவாள் விண்ணரசே வேதமுனி சீற்றம்
பிழைத்துப் பிழைப்பரோ பின். 4

வெண்ணெ யுருகாதோ வெங்கதிரின் முன்னுற்றுற்
பெண்ணரசி யுன்வடிவப் பேரழகைக்—கண்ணுற்ற
புங்கவருந் தேடுவரோ செம்பொருளைப் பூங்கொடியே
சங்கை யுனக்கேன் தவிர். 5

ஏனை யரம்பையர்க ளீடில்லை யென்றறிந்து
மானே யழைத்தேன் மதனேவல்—தானைசூழ்
கோமளமே யுன்னைக் குறையிரப்பான் கோசிகனும்
காமக் கரைகாணுன் கண்டு. 6

தேவர்கோன் கூறுமித் தேறுதலைக் கேட்டவளென்
ஆவி யழிந்தாலு மாற்றுதற்குன்—சேவகமே
தேர்ந்தேற் குறுதுணையாத் தென்ற லெனுந்தேவை
ஈந்தருள்க வென்று ளிரந்து. .7

பூவாளி கொண்டுன்முன் போவான் மதவேளும்
நீவாழி மேனகை நீள்புவியிற்—பாவேறு
தென்றலான் வேனிலான் தேர்செலுத்த வுய்ப்பன்யான்
என்றனன் தேவேந் திரன். 8

காவி மயிற்றோகை கார்வேந்தன் முன்பணிந்து
மேவினுள் மேவியதும் மேதினியில்—ஆவி
அசையா துயிர்க்கு மருந்தவத்தோ னுள்ள
மிசையே முகிழ்க்கும் மயல். 9

ஓடு முளத்தை யொருதலையா மாய்த்திட்டேன்
ஈடு மெனக்குண்டோ விவ்வுலகில்—வீடுற்றேன்
என்று பெருமிதங்கொண் டெண்ணி யிருப்பேனை
வென்றிடுங்கொல் மாயை விளைந்து. 10

பெண்ணில்லா வெங்கானிற் பேதை மனமெங்ஙன்
விண்கோட்டை கட்டினாய் வீணாகத்—திண்மை
நினைவழியக் கற்றாய் நிறையழியா யென்று
தனைமறந்தா னம்மா தவன். 11

வேனில் விளக்கும் விரிகதிரோன் தன்கிரணம்
கானிற் குளிர்ந்து கவின்பொன்னாய்—வானிற்
படிந்திடவே மாலை பனிமதியின் தூதாய்
நடந்ததே ஞாலத் திடத்து. 12

அரும்பீன்ற முல்லையு மைதவிழுங் கோங்கும்
கரும்பேய்க்கும் மென்பணையுங் காமர்—சுரும்பூதும்
செந்தமிழின் தீம்பண்ணுஞ் செங்குமுத வாயிதழும்
அந்திப் பிறையுமுண் டாங்கு. 13

இவையனைத்தும் பெண்ணு யெழுந்தனவோ இன்பச்
சுவைநடிக்குஞ் சந்தச் சதிரோ—சுவைதேர்
கலையறிஞர் தம்மனத்திற் காண்கவியோ மற்றுச்
சிலைமதற்கு மோர்கனவோ செப்பு. 14

அரதனமும் பொன்னு மணிசெய்யும் வானத்
திரைகடந்து வந்த திருமின்—தருசூழ்
பசும்புற் றரையரங்கா யாடினுள் பாடி
அசும்புற்ற தேன்வாயி னுள். 15

காலிற் சிலம்பரியே கையிற் செறிவளையே
மேலுற்ற பூம்பட்டின் மேகலையே—ஆலித்துக்
கானை யுருக்குமக் காரிகையின் கானத்திற்
கானமெய்த் தாள மவை. 16

போதமவிழ் யோகம் புரிவோ ரகத்துமுரல்
கீதமெனக் கிண்கிணிசேர்ந் துற்றவிசை—ஓதுமுயிர்
ஓவியம்போ லங்கிருக்கு மொண்முனிவன் றன்னிதயம்
பாவியதே பண்ணின் திறம் 17

ஏதே புறத்திர்க்கு மிவ்விசையென் றோர்ந்திடுவான்
மீதே யிளந்தென்றல் மெல்லென்று—தாதார்பூ
வாசத் தொடுவீச வாசவற்கு வாழ்வளித்துக்
கோசிகன்றன் கண்ணைவிழிக் கும். 18

கண்ணை மெலவிழித்துக் கண்டானே கோசிகன்மன்
பெண்ணென்ற தெய்வீகப் பேரழகைக்—கண்டவுடன்
கொண்டதுளங் காமமோ கோலக் கவிதையோ
பண்டைவினை தானோ பகர். 19

சுட்டெரிந்த சாம்பருர மாகுஞ் சுவறியது
பட்ட தரைநற் பயிர்கொழிக்கும்—விட்ட
குறையுண்டோ காமங் குமைத்திட்டேற் கின்னும்
உறுமோபெண் ணுசை யுயிர்த்து. 20

தன்னிலைமை கண்டிங்ஙன் தன்னை முனிந்தான்முன்
பொன்னின்ற மின்னல்நேர் பொய்யிடையாள்—சென்னிதரை
மீதே படிந்தாள் முனிவ னகம்படிந்தாள்
கோதை யவிழ்ந்த குழல். 21

என்னைப் பணிந்திவ் விளங்கொடியாள் வீழ்கின்ருள்
என்ன குறையுற்ரு ளென்ருய்வாம்—நன்மனமே
பெண்ணுக்கே யஞ்சினுய் பேதுற்ரு யென்றுதவன்
தண்ணுற்ருன் வெம்மை தணிந்து.

தமியளா யிக்கானில் தாழ்குழலாய் நீவந்
தமுதொத் திசைபாடி யாடிக்—குமுதத்தை
ஒத்த விதழ்வாயா லோர்மொழியுங் கூருய்மற்
றித்தரையி லுற்ற தெவன்.

எழுக வெழிற்கொடியே ஏதமிலை யீண்டுக்
கழிநெடுங் காலநீ வாழ்க—ஒழிகதுயர்
என்று முனிவ னியம்ப எழுமணங்கு
தென்றலெதிர் வீசிவரத் தேர்ந்து. 24

நாணிப் புறமொல்கி நாடகத்தாள் நின்றவிழ்ந்த
வேணி முடிக்க விரும்புவாள்—பூணவிரும்
மேகலையும் மென்கலையும் மெய்ந்நழுவ மாருதம்வந்
தாகடியஞ் செய்யு மலைத்து. 25

மீண்டுபணிந்துகுறைவேண்டுவாள்போன்மொழிவாள்
ஆண்டகையென் நாண்காற்றுக் காற்றுமல்—ஈண்டறியேன்
செய்த பிழையுண்டேற் செய்கவரு ளுன்பணியைக்
கைவிடேன் சேடியெனைக் கா. 26

மங்கையவள் நாண்குலைத்த மாருதஞ்சென் றம்முனிதன்
அங்கித் தவத்தை யவிக்குமால்—செங்கையாற்
பற்றி யவள்மருங்குற் பைந்தளிராம் மேனிதன்மீ
துற்றிடவே தூக்குவனங் குய்த்து. 27

சேடியலை யென்னிதயச் செந்தா மரைத்திருவே
தேடுந் தவத்தெழுந்த தெள்ளமுதே—மூடுமிருட்
கானகத்திற் காலுங் கதிர்ப்பிழம்பே நீயென
தூனகத்துப் புக்க வுயிர். 28

வானகத்தி னின்றுநீ வந்தாயோ வையகத்தில்
தேனுக்குந் தீம்பண் திறம்பேசிக்—கானுகந்த
மங்கையே என்றுனம் மாமுனிவன் மெய்புளகித்
திங்கிதங்கொண் டாள்மின் னிடை. 29

முன்னே விதிப்படியுன் முன்வந்தேன் மெய்த்தவனே
பொன்னுலகை விட்டுன் புகலடைந்தேன்—சென்மம்
எடுத்த பயனடைந்தே னென்று ளிதழ்த்தேன்
மடுத்தான் முனிவன் மகிழ்ந்து. 30

ஆயிரங் கண்மிளிரும் ஆகண் டலனெனவே
மாவிசும்பு முற்றும் மணியுடுக்கள்—சாயுமதித்
தேசவியு மெல்லேத் திகழுவன மைக்கங்குல்
பாசமெனச் சூழப் பரந்து. 31

முன்வினையி னீட்டங்கள் மூட்டிய போலெங்கும்
மின்மினிகள் மேவி முயங்குவன—பன்மலர்கள்
காமன் கணைசொரிந்தா லென்ன மணங்கமழ்ந்து
தாமறைந்து நின்ற தழைத்து. 32

காந்தருவ ரின்பமணக் காதல் மகிழ்ந்தளித்த
ஏந்திழையே யுன்னே யிருத்துவேன்—மாந்தரிலா
இக்காட்டி னின்று மிருவிசும்பின் மேலாய
மிக்கான நாட்டின் மிசை. 33

காதற் கவினுலகின் காந்திமணிப் பீடத்தின்
மீதிருத்தி யுன்னடியை மின்வடிவச்—சோதி
அரிவையர்கள் சூழ்ந்துபணி யாற்றயான் வைத்தல்
பெரியதவம் செய்தவென் பேறு. 34

இருடியர்தங் கோனிங்ங னின்ப வுரைகள்
பருதி யெழுந்து பகல்செய்—வரையில்
பகர்ந்தானப் பைங்கொடியுங் கற்பகநாட் டின்பம்
இகழ்ந்தாள்தன் ஏவல் மறந்து. 35

பாசிலையிற் பொன்னைப் பரப்பப் பகலவன்கை
வீசி யெழுவான்போல் விண்ணுதித்தான்—வாசவற்கு
வெற்றியெனக் கூஉய் விளம்பிற்றே கான்கோழி
அற்றைப் பகல்விடிந்த வாங்கு. 36

இருண்மறைய வெல்லி னொளிமிகுந்த வாபோல்
அருண்முனிவ னுள்ளத் தமைந்த—தெருளெல்லாம்
மேனி முழுதெங்கும் மின்னித் திகழ்ந்ததே
வானவர்கோன் வெட்கும் வகை. 37

அகத்தி னொளிகா ணறிஞ ருடலைந்
திகத்தை வெறுத்தா ரெனினும்—சுகத்தைக்
கருது முளங்கொண்டாற் காமற்கும் மேலாம்
உருவடைவ தொன்றோ வியப்பு. 38

பொன்னுலகிற் காணாப் புதுமைக் கவினுற்ற
மன்னவனை மாதவனை மாமறைகள்—சொன்னமெய்க்
காட்சியனைக் காதற் கதிரவனுக் கண்டெழுந்தாள்
வாட்டடங்கண் மங்கை விழித்து. 39

தூய முனிவன் திருமேனி தொட்டமையால்
மாய மனைத்தும் மறந்தாளவ்—வாயிழையாள்
கற்புத் திறம்பூண்டு காதிமகன் றாள்பணிந்
தற்பிதஞ் செய்தா ளகம். 40

வெய்ய கனல்காயும் வேனிற் கொடுமையால்
செய்ய தளிரனையாள் சாயுமால்—வையம்
புரந்தான்முன் ஞாயிற்றைப் போற்றி யிரந்தான்
வரந்தான் வழங்க விரைந்து. 41

காதற் குகந்தநற் கார்ப்பருவங் காட்டாயோ
வேதங் கரைந்த விரிசுடரே—மாதிவளை
வெங்கதிரால் வாட்டேல்யான் வேண்டும் வரமென்றான்
துங்கமுனி யங்கை தொழுது. 42

பூவுலகில் தந்தியிலாப் பேச்சுக் கணப்பொழுதில்
மேவுதல்போல் நாடுபல மீதூர்ந்து—தாவும்
மனத்தை யலையடங்கு மாகடல்போற் செய்வார்
நினைத்தவெலா மகும நிகழ்ந்து. 43

விண்ணிற் கருமேகம் மிண்டிக் குழுமியவே
கண்ணிற் படமின்னிக் கார்ப்பருவம்—தண்ணென்று
பூமி குளிரப் புதுமழையைப் பெய்ததே
காமர் மலர்சொரியக் கான். 44

முழங்கி முகில்வானம் மூடி மழையைப்
பொழிந்தப் பருவம் பொருந்த—விழைந்து
கருக்கொண்டாள் காரிகையக் கானத் தெழிலும்
உருக்கொண்ட போதங் குயிர்த்து. 45

இரவும் பகலுமவ் வேந்திழையாள் மோகம்
தரமயங்கி வாழுந் தவத்தோன்—பருவங்கள்
ஒன்றன்பி னொன்றா யவண்முன் நடமாடும்
வென்றியைக் கண்டான் வியந்து. 46

காலத் தளைப்பட்டுக் காமந் தரும்விந்தைக்
கோலத்தாற் கட்டுண்ட கோசிகன்—சாலமிஃ
தென்னென் றகத்து ணுணர்ந்தா னிமையவர்கள்
மன்னன்றன் மாயத் திறம். 47

தெய்வப் பிழம்பனைய தேசொளிரு மோர்மகவைத்
தைய லளித்தாள் தவமுனிக்கு—வையம்
புகழ்பரத வம்சம் புரையில் மரபு
திகழ்தற் பொருட்டுச் சிறந்து. 48

முக்காலம் முற்றுணரு மாற்றல்மறைந்துபின்
அக்கால மம்முனிவற் கெய்தியதால்—துக்கம்
ஒருசிறிது மில்லா துவளைப் பிரியக்
கருதுங் கருத்துணர்த்தி ஞன். 49

பெண்ணுய்ப் பிறந்தவிப் பிள்ளையும் பாராது
புண்ணுக்கி யென்னைப் புறக்கணிக்க—அண்ணலே
யான்செ யபராதம் யாதுளதோ கூறென்று
மான்விழியாள் கேட்டாள் மறந்து. 50

தேவர்கோன் யான்செய் தவத்தைச் சிதைப்பதற்
கேவி யுனையிங் கனுப்பினுன்—யாவும்
மறுக்காதே மாதே மறந்தாயோ செல்க
துறக்கத் துலகந் தொடர்ந்து. 51

இம்மகவைக் காக்க விறையுண் டெனவறிவேன்
மம்மரி லாழ்ந்து மயங்கற்க—செம்பொருளைக்
காணத் துணிந்தேன் கணமு மினித்தாழேன்
வீணுக வேண்டாய் வரம். 52

இவ்வா றுரைத்த விருடிதன் வன்மொழிகேட்
டொவ்வாத சொல்லொன் றுரையாது—செல்வாள்
மகவைப் புரக்க மனதிற் கவன்று
வகையொன்று கண்டவிண் மாது. 53

உடலைப் பிரியு முயிர்போல் முனிவன்
குடிலைக் கடந்து கடிதில்—அடவிப்
புறத்தை யடைந்தாள் பொழிலுதிர்ந்த பூக்கள்
நிறைத்தநதி மாலினிவாய் நேர்ந்து. 54

பச்சைக் குழந்தைக்குப் பாலூட்டிப் பைந்தொடியாள்
நிச்சயமாய்க் காக்கும் நினைத்தெய்வம்—அச்சம்
இலையென் றதனை யிருத்தினள் பைய
அலைமோது மாற்றருகே யாய்ந்து. 55

மண்ணுலகில் நேர்ந்த மயக்க மெலாந்தீர்ந்து
விண்ணுலகை நோக்கினள் வேற்கண்ணள்—திண்ணமுடன்
காத்திருந்த தேவர்கோன் கட்டளையா லாங்கெழுந்தோர்
மாத்திரையில் மேவினள் வான். 56

காசினியோர் போற்றுங் கடுந்தவத்தோன் கண்ணுவன்
மாசி லடியார் மருங்குசூழ்—ஆசிரமம்
அப்போ தகன்றுபோ யாற்றின் துறையடைந்தான்
மெய்ப்போதச் சீல முனி. 57

தூய நதியிலவன் றோய்ந்துநீ ராடியபின்
போய வழியிற் புலனுற்றான்—தாயில்
சிசுவைச் சகுந்தமெனும் செம்புட்கள் சூழ்ந்து
கசிவுடனே காக்கக் கவிந்து. 58

களித்தான் கரத்தா லெடுத்தா னதனை
விளித்தான் சகுந்தலையே வாழ்கென்—றளித்தான்
அரும்பெயரை யாண்டதனைக் காத்தவற்குத் தந்த
உரிமையுறு புட்கடமை யோர்ந்து. 59

மனிதக் குலத்துக்கு மாண்பா யுதித்த
புனிதக் குழவியைப் பொய்யில்—முனிவன்றன்
ஆசிரமஞ் சேர்க்க அருந்தவத்தோர் கண்டதற்
காசி யளித்தா ருவந்து. 60

மண்ணில் மனைவாழ்க்கை மாய மெனத்துறந்த
கண்ணுவ னம்மகவைத் தான்பெற்ற—பெண்ணுக்
கருதிப் புரக்கின்ருன் கண்ணின் மணிபோல்
சுருதி முழங்கவதைச் சூழ்ந்து. 61

இயற்கை யெழிலில் திளைத்து வளர்வாள்
கயற்கண் மிளிர்பேதை கண்டோர்—வியக்க
மதியி னொளியும் மகிதலத்தைச் சுற்றும்
கதிரி னொளியுங் கலந்து. 62

மழலை மொழிபேசி மான்கன்றி னோடு
தழுவி விளையாடித் தத்துங்—கிளியுடனே
கொஞ்சிக் குலாவிக் கிளர்வண் டுடன்பாடி
விஞ்சை மகள்வளர்ந்த வாறு. 63

மின்னற் கொடிபோ ஞுடங்கி மலர்மிடைந்த
பொன்னின் வடிவாய்ப் பொலிகின்றுள்—கன்னி
மதனிழைத்த சிற்பம்போல் மங்கைப் பருவப்
பதமடைந்து பாரிற் பிறந்து. 64

## காதற் காண்டம்

இமயச் சிகரத் தெழுந்தமுதம் பாயும்
யமுனைத் துறையி னருகில் —அமையும்
இருநிலத்துக் கோர்திலக மிந்துக் குலத்துப்
புருமன்ன ஞண்ட புரம். 65

சிற்பஞ் செறிந்து திகழுமுயர் கோபுரங்கள்
அற்புதமாய் வாயி லலங்கரிக்க—விற்படையும்
மற்றும் படைகளும் மாற்ருரை யோட்டுவிக்கும்
வெற்றி விளங்கு நகர். 66

கடிமதில்கள் சூழக் கவின்மாட மோங்கிக்
கொடியிலங்கு வீதி பலவும்—துடியிடைசேர்
கன்னியர்கள் கூடிக் களித்து நடமாடும்
பொன்னரங்கும் கொண்டததன் பொற்பு. 67

பொய்கையும் பூங்காவும் போற்றுதிருக் கோயிலும்
செய்குன்றும் ஆய சிறப்பமைந்து—வையத்துள்
மிக்கு விளங்கும் பதியென் றதைமதிப்பர்
திக்கெட்டும் வாழ்வார் தெரிந்து. 68

பொருட்செல்வத் தோடு புகழ்படைத்த மாந்தர்
அருட்செல்வம் பெற்றிவ் வகலுட்—செருக்கற்
றறவழியி னிற்ப ரறிவுக் கலைகள்
துறைமுற்றக் கற்றுணர்வு தோய்ந்து. 69

கற்புக் கடன்பூண்ட காரிகையார் தங்கணவர்
அற்புப் பணிபுரியு மில்வாழ்விற்—பெற்றெடுக்கும்
மக்கள்மேன் மக்களாய் மாண்பு பெறநோற்பர்
தக்கவகைத் தாய தவம். 70

நிலத்தின் வளத்தோடு நீர்வளமுஞ் சேர்ந்து
குலத்திற் குணம்வளரு மாபோல்—நலத்த
விளைவைக் கொடுக்கும் வியனு டதனில்
களவுங் கடிகொலையு மில். 71

முறைசெய்து காத்த முடிமன்னர் வம்சம்
பிறைபோல் வளர்ந்து பிறங்க—மறுவில்
துடியந்த னெஃனுமொளித் தோன்ற லுதித்தான்
படிசெய் தவத்தின் பயன். 72

அழக னிவன்மதவே ளென்ப ரமரில்
தழலங்கைத் தாங்கும் திறலோன்—மழவிடையான்
அன்றசுரர் மாள வளித்த முருகென்பர்
மன்பதையோர் தம்முள் மகிழ்ந்து. 73

வேந்தர் குழாமேத்த வேதியர்கள் வாழ்த்திசைப்ப
மாந்தர்க்கோ ரிந்திரனுய் மாநிலத்தில்—வேந்தல்
மணிமுடியைச் சூடினுன் மங்கலநாள் மாற்ருேர்
பணிந்தடியைச் சாரப் படிந்து. 74

திரையோதஞ் சூழ்ந்தொலிக்குந் தென்னிலங்கை காக்கும்
துரைராம நாதன்றன் சீர்த்தி—பரவும்
புலமெல்லாஞ் சென்றதே பூமடந்தை போற்றும்
குலமன்னன் தண்ணளிச்செங் கோல். 75

மக்கள் சபைகூடி மாறின்றி யாட்சிக்குத்
தக்க துணைசெய்யத் தாழாமல்—எக்குறையும்
நீக்குந் திறன்படைத்த நேர்மை யமைச்சருடன்
காக்குஞ்செங் கோலோச்சுங் கோ. 76

வென்றிக் கிணையவன் வீறுகொடை கற்ருேரின்
நன்றிக் கிணையவன் நாணுடைமை—மன்றத்து
நீதிக் கிணையவன் நேயமிகுங் கண்ணுேட்டம்
ஓதற் கிணையவன் ஓர்ப்பு. 77

சேலொத்த கண்மடவார் சேவித்து நிர்த்தமிட
ஓலக்கங் கொண்டான்முன் ஓர்நாளெம்—சாலிப்
பயிரழிப்ப கான்மிருக மென்றடவிப் பாங்கர்
வயலுழவர் கூறினுர் வந்து. 78

காட்டிற் புகுந்து கரடிமரை பன்மாவின்
கூட்டத் துடன்கொடிய கொல்புலியும்—வேட்டை
அடுதற் கவனெழுந்தா னொலித்துப் பின்னே
தொடரத் துரகப் படை. 79

போகும் வழியிற் புறஞ்சூழ் பலகுடிகள்
மேகத்தைக் கண்ட மயிற்குலம்போல்—வேகத்
துடன்வந் தருகணைந்தார் வேந்தற் குரிய
கடனறிந்து காணிக்கை கொண்டு. 08

தேமா தளிரேந்தத் தென்றல் மலர்தூவக்
காமாநு ராகங் குயிலெழுப்பப்—பூமா
துளம்பூத் துயிர்கட் குவகை யளிக்க
இளவேனில் வந்த தெதிர். 81

வாய்க்கால் வழியோடி வான்யாற்றி னீர்வயலில்
தேக்கி விளைவிக்குஞ் செந்நெற்பொன்—பூக்கதிர்கள்
சேர்த்துக் குவிப்பார் செழுமருதந் தான்கடந்து
தோக்குரிசில் சென்றான் வனம். 82

அடவி யடைந்தங் கலர்முல்லை சூழும்
இடமெய்தி எல்லை அரணிற்—படிமன்னன்
தங்கித் தலைவேடர் கூத்தயரக் கண்ணயர்ந்தான்
கங்குற் பொழுதுவரக் கண்டு. 83

காட்டிற் பரிதிக் கதிர்நுழையா வைகறையில்
வேட்டைக்கு வேடர் வழிகாட்ட—ஈட்டிவேற்
பல்படைகள் கொண்டு பரிவாரம் போயபின்
செல்வேந்த னேறினன் தேர். 84

கதநாய்க ளோடுந் திசையிற் கலித்தேர்
அதிவேக மாயுய்த் தடவி—அதரைக்
கடந்தான் பரிப்பாகன் காட்டியொரு மானைத்
தொடர்ந்தா னதன்பின் துதைந்து. 85

பறந்தாற்போற் பாய்ந்தோடு மானை விழுத்த
விரைந்தரசன் வில்லெடுத்து நாணிற்—சரந்தொடுக்கக்
கொல்லாதே யிம்மானைக் கொல்லாநற் கொள்கையார்
எல்லையீ தென்றதோர் சொல். 86

கேட்டா னரசன் கணைவில்லைக் கீழிட்டான்
வேட்டை விருப்பை யறவிட்டான்—மாட்சி
முனிவர் வதியும் முகில்தோய் தலத்தின்
புனித வரம்புட் புகுந்து. 87

கூற்றின்வாய்த் தப்பியக் கோலமா னுடைவங்
காற்றுந் தவத்தி னமைதியொளிர்—தோற்றம்
படைத்த விருமுனிவர் பார்த்திவனை வாழ்த்திக்
கொடுத்தார் குழைந்து வரம். 88

உலக முழுதாளு மோர்மகனைப் பெற்று
நலங்க ளடைகநின் ணட்கள்—பலவாக
மானுக் குயிர்கொடுத்த மன்னவனே யென்றுரைத்தார்
ஞானத்தி நாள்வேட்கு நர். 89

பின்னு மவருரைத்தார் பீடுடைய கண்ணுவர்
என்னு மெமது குலபதியின்—மன்னுபுகழ்
ஆசிரமங் காண்பா யணித்தா நதிக்கரையில்
வாசமெழுஞ் சோலை வயின். 90

எந்தலைவர் யாத்திரைக்குச் சென்றுள்ளா ராயினும்
வந்த விருந்தினரை யாதரித்து—வந்திக்கச்
செந்தா மரைத்திருவாஞ் செல்வி யவர்தனையை
முந்துவாள் யாவர்க்கும் முன். 91

பூதலத்தைக் காக்கும் புரவலனே யங்குநீ
போத லுனதுரிமைப் புண்ணியமாம்—வேதமுறை
சாற்றுஞ் சமித்துவகை தேடியாஞ் செல்கின்றோம்
நாற்றிசையீண் டென்றூர் நயந்து. 92

அதுகேட் டரச னவரை வணங்கித்
துதிகூறித் தேர்ப்பாக னேக்கிக்—குதிரைகள்கொண்
டாற்றிற் குளிப்பாட்டி வாவென் றரசவுடை
மாற்றினன் சோலை மறைந்து. 93

வலது புயமும் விழியுந் துடிக்கத்
தலையாய நற்சகுனந் தானிஃ—துலவாக்
கிழியளிக்குங்கொல்லோ வெனவெழுச்சி கொண்டான்
வழிநாடி வாள்வேந்த னங்கு. 94

அடர்ந்த மரங்க ளயலெங்குஞ் சுற்றிப்
படர்ந்த கொடிமிடைந்த பாதை—நடந்தருகே
வேள்விப் புகையெழுந்து வீசுநறுங் காற்றுவரும்
சூழ்வை யடைந்தான் தொடர்ந்து. 95

மாலை தொடுத்தாற்போல் வன்ன மலர்மிதக்கும்
மாலினி யாற்றின் மருங்குசூழ்—சீலத்
தவமுனிவர் தம்மிருக்கை தீவளர்க்கும் முன்றில்
இவைகண்டான் மன்ன னெதிர். 96

ஈண்டான் பிணைமான் களித்துலவக் கானமயில்
வண்டார்க்கும் பூமரஞ்சார் மன்றுடப்—பண்கள்
பலபாடிப் புள்ளினங்கள் பாசிலைமேற் பாயச்
சிலமந்தி சேர்ந்து நக. 97

மான்கள் பயமின்றி மேய்வதற்கு வான்பயிரின்
தானியங்க ளெங்குந் தரைகிடப்ப—மேனின்று
கிள்ளைகள் காதல் கிளர்ந்து மொழிந்தவற்றில்
துள்ளிச் சுழன்று தின. 98

சாந்தம் விளைக்குந் தவமுனிவர் வாழுமிடம்
வேந்த னுளத்தை மிகவீர்க்கத்—தீந்தேன்
சொரிந்தவிழ்பூஞ் சோலை நுழைந்த நிழற்கீழ்
இருந்தா னியற்கை வியந்து. 99

வாசங் கமழும் வனமலர்க ளாடமெல
வீசு மிளந்தென்றல் மேவமுனர்த்—தேசு
வடிவுதிக ழோர்மங்கை தோன்றினுள்வாழ்க்கை
விடியவரும் விண்கதிர்போல் வந்து. 100

தோழி யிருவர் தொடர்ந்தா ரவரைவிளித்
தேழிசையுஞ் சேர வியம்புவாள்—கேழ்கிளரும்
முத்தரும்பு மென்னகையாள் முல்லைக் கொடியங்கு
வைத்து வளர்த்த விதம். 101

மின்னிடையின் மீதவர்பின் நீர்க்குடங்க ளேந்தினராய்ப்
பன்னி மொழிந்து பரிகசித்—தின்னுயிர்போல்
தாந்தாம் வளர்க்குந் தருக்களுக்கு நீரவார்க்க
வேந்தன் மறைந்தான் விரைந்து. 102

வானுலகுங் காணு வனப்புடைய விவ்வனிதை
யான்காண வன்றோ வலந்துடித்த—தேன்பாயும்
பூங்காவி னின்றிவளும் பாங்கியரும் பேசக்கேட்
டீங்கிருப்ப னென்றிருந்தா னேய்ந்து. 103

சகுந்தலையுன் தங்கைநிகர் செல்வக் கொடியின்
றுகந்தயல்சேர் மாமரத்தி லொன்றி—மிகுந்தார்வக்
காத லுடன்றழுவக் கண்டோ மதையொப்ப
நீதழுவ நாதனெங்கே நேடு. 104

இங்ஙன் மொழிந்தவொரு தோழிக் கெதிருரைக்க
நங்கை சகுந்தலை நாணுற்றுச்—சங்கைமிகும்
உன்சொ லுனக்கே தகுங்கா ணெனக்கூறித்
தன்னெஞ் சொளித்தாள் தகைத்து. 105

காலிற் பெருவிரலைக் கண்ணுக்குங் காரிகையின்
சேலுற்ற செந்தா மரைமுகத்தில்—மாலுற்ற
கோலத்தைக் கண்டான் குவலயத்தைக் காக்குஞ்செங்
கோலுற்ற மன்னன் குறித்து. 106

காதற் பருவத்தாள் கட்டழகி கண்ணுவ
மாதவத்தோன் பெற்ற மகளல்லள்—தீதற்றேன்
உள்ளம் புகுந்தா ளுலகா ளரசகுலத்
துள்ளவளென் றையுறுமென் நெஞ்சு. 107

நல்லா ருளத்தவா தோன்றுங்கால் நன்னெறிச்சார்
பில்லா தெழுவதிலை யானாலும் —சொல்லாடும்
மங்கையரைக் கேட்டல் மரபன் றெனநினைந்
தங்கிருந்தான் வேந்த னமர்ந்து. 108

முல்லைக் கொடியருகே நின்றநறு மொய்குழலாட்
கொல்லைத் திருமணம்வந் துற்றதென்று--சொல்லவரும்
தூதாக வோர்வண்டு தோன்றியவள் காதணிபூந்
தாதூதக் கண்டாள் தனித்து. 109

சுற்றி யெனைவளைத்துச் சூழ்கின்ற விவ்வண்டைச்
சற்றே தவிர்ப்பீரென் தோழியரே—பற்றியெனை
என்றழைத்தாள் கேட்டவர்கள் கூறினரேன்பயந்தாய்
வென்றிவேல் வேந்த னுளன். 110

அரசன் மறைந்தங் கிருந்த தறியார்
உரையம் மொழிகேட் டுடனஃ—தரிய
தருணமெனத் தேர்ந்தவர்முன் தான்விரைந்து சென்றான்
திருமன்னன் தீர்ப்பனிட ரென்று. 111

ஐயநீர் யாரென் றவர்கேட்க யானுறவோன்
வையமிதை வாழ்விக்கும் வேந்தற்கு—மெய்ம்முனிவர்
சேவை செயவந்தேன் செய்பணிகள் யாவென்றான்
பாவையரைப் பார்த்துப் பரிந்து. 112

பெரியீ ருமைக்கண்டிப் பெண்ணரசிப் பின்சூழ்
வரிவண்டு போயிற்று வாழ்வீர்—மரநிழற்கீழ்
வெண்மணலின் மீது விருப்புற் றமர்கவெனப்
பண்மொழியார் சொன்னார் பணிந்து. 113

வேந்தர் குலத்திர் விருந்தினராய் வந்தவுமக்
கேய்ந்த வுபசாரம் யாமறியோம்——தீந்தேன்
கனிகொணர்வோம் பாலொடென்றக்கன்னியர்கள்கூற
இனியமொழி சாலுமென்ருன் னிண்டு. 114

குறுவியர்வை கொண்டு களைத்தாளிக் கன்னி
அறுவை மரவுரியு மாற்ருள்——செறிகுழலீர்
எல்லீரும் வந்திருமி னென்ருன் சகுந்தலையின்
மெல்லாகம் நோக்கியபூ வேள். 115

மலர்ந்தபல பூச்சுமந்த மென்கொடிபோல் நாணல்
அலந்தவளு மாங்கொதுங்கி நின்று——கலந்துவிழி
காத லொளிபாயுங் காவலன்றன் கண்ணேக்கின்
மீது படிந்தாள் மிளிர்ந்து. 119

யாதுற்றே னிங்க னிவர்பா லெனதுமனம்
பேதுற்றுச் செல்லப் பிணைப்புற்றேன்——ஈது
புதுமை யெனநினைந்தாள் பூதலத்து வாழ்வில்
வதுவைச் சுவையறியா மாது. 117

கண்ணுவ மாமுனிவர் தம்புதல்வி கன்னியிவள்
கண்ணனையா ளெந்தோழி காரணமாய்த்—தண்ணரும்
தீர்த்தஞ்சேர் யாத்திரைக்குச் சென்ருரெனப்பகர்ந்தார்
பார்த்திவனைத் தையலார் பார்த்து. 118

இல்வாழ்வை நாடா வியமத்தார் கண்ணுவர்க்கு
வில்லேர் நுதலாள் மகளாமோ—சொல்வீர்
எனவரசன் கேட்க இயம்பினரம் மாதர்
முனிகோ ரிகென்சரிதம் முன். 119

அரச விருடி யவரை யணுகி
பிறைநுதலொண் மேனகை பெற்ற—திருமகளாம்
இம்மாதைத் தன்மகளா யேற்ருர்நற் கண்ணுவனுர்
நம்புவீ ரென்ருர் நயந்து. 120

மின்னல்வான் மீதுதித்துத் தோன்றுவதே யல்லாமல்
இந்நிலத்தி னின்றெழுவ தில்லையாம்—மின்னனையாள்
மண்ணுலகில் வந்து பிறந்தாலும் மெய்ம்மையாய்
விண்ணகத்தா ளென்ருன் வியந்து. 121

அழகொழுகு மங்கையிவ ளாயுள் முழுதும்
இழிவென் றிகத்தை வெறுத்துப்—பழுதிலா
மெய்த்தவத்தை யாற்ற முனிவர் பணித்தாரோ
இத்தலத்தின் தூயநெறி யேற்று. 122

என்றரசன் கேட்கவவ ரீதையம் நீக்குவார்
மன்றல் மலர்மாலை சூட்டவிவள்—வென்றிமிகும்
வேந்த ெருவன் வருவா னெனமுனிவர்
தேர்ந்துளா ரென்ருர் தெரிந்து. 123

சீறிச் சினந்தெழுவாள் போன்று சகுந்தலைதான்
கூறுவாள் கேளேன் குறும்பிங்ஙன்—நீருரைக்க
மூதாட்டி கௌதமிபால் சென்று முறையிடுவேன்
கோதாட்டு நும்மைக் குறித்து. 124

விருந்தினரை விட்டுநீ சென்று யெனக்கேட்
டருந்தவத்தா ரெந்தை யறியின்—வருந்தாரோ
என்னவவர் கூற விணங்கி யவளிருக்க
உன்னுவான் வேந்த னுளம். 125

நெஞ்சேயினித்தெளிவாய் நீயங்கியென்றஞ்சும்
விஞ்சைமகள் தண்மையொளிர் விண்மலராம்—கஞ்சமலர்
போன்முகமுங் கண்ணும் பொருதனமுங் கொண்டவிவள்
யான்வரிக்க வந்த வது. 126

விலகுமின் வேந்தன் துடியந்தன் வேட்டைக்
குலவேடர் குத்தியவோர் யானை—நிலைகலங்கி
இத்திசையை நோக்கி வருகின்ற தென்றுசிலர்
கத்திக் கழறினர் சேண். 127

நங்கைமீர் தாழாது நாடுமி னாசிரமம்
இங்கிருந்து யானிவ் விடர்தடுப்பேன்—பங்கங்கள்
வேந்தனல் வேட்டையால் வாரா வெனவுரைப்பீர்
சாந்த முனிவரிடஞ் சார்ந்து. 128

இவ்வாறு வேந்த னுரைக்க வெழினலத்தார்
செவ்வே யுமக்காய சீர்சிறப்புச்—செய்யாக்
குறையுடையேம் மீண்டுங் குணமுடையீர் வாரீர்
நிறைவாக்கு வோமென்றார் நேர்ந்து. 129

கவுதமியார் தேடியெமைக் காண வருமுன்
தவநிலையஞ் சேர்வோம் தயங்கா—தவதியிலேம்
என்றவர்கள் கூறி யெழுந்தார் சகுந்தலையும்
பின்றொடர்ந்தாள் நெஞ்சைப்பின் விட்டு. 130

வீரத் தடந்தோளான் வேந்தனைப் பின்றிரும்பிப்
பார்க்கும் விருப்பாலப் பைங்கொடிதான்—பேர்த்து
நடவே னெனைக்குத்தும் நாணற்புல் லென்றங்
கிடையிடையே நின்றாள் நடந்து. 131

காதற் குறிப்பிவளிற் கண்டே னெனதுமனம்
யாதொன்றும் நாடா திவளன்றித்—தாதவிழ்பூஞ்
சோலை யினிவறிதா மென்றுளத்திற் சோர்ந்தகன்றான்
ஞாலத்தைக் காக்குமவ னேந்து. 132

வேட்டுவர்க்குத் தப்பிப்போய் வெங்களிறு வேறுதிசைக்
காட்டிற் புகுந்திருக்கும் கர்ணவிலை—வேட்டை
விடுத்திருப்பே னென்றவ் வியன்கான் கடந்தன்
றடுத்தா வரணை யயர்ந்து. 133

உலகுக் குயிரளிக்கு மொண்சுடரோன் வானில்
உலவுந்தன் எல்லேகடந் தோய்ந்து—விலகுவான்
அந்தி மயங்கு மடிவானம் போய்ப்படிந்தான்
செந்தீ யெனவதனைச் செய்து. 134

காத லுதயத்தைக் காட்டி மறைந்திட்டான்
சோதிச் சுடரோன் செயலற்றேன்—மேதினியில்
வாழ்ந்தென் பயனென்று வாட்கதிரோன் போன்முனும்
ஆழ்ந்தான் துயரத் தமிழ்ந்து. 135

கங்குற் படவிருண்ட கானத்தின் மீதெழுந்து
பொங்கும் நிலவிற் புவிமன்னன்—தங்கும்
அரண்படர்ந்த முல்லே யலர்ந்த மணத்தைப்
பரந்தளிக்குந் தென்றல் படிந்து. 136

மானின் மருண்ட விழிவென்ற மங்கையைத்
தான்சென் றினிப்பொழிலேச் சார்ந்தடைதல்—வானின்று
மாமதியைக் கொண்டு வருவதொக்கு மென்றரசன்
காமத் துழன்முன் கவன்று. 137

திங்கள் முகிற்படலந் தோய்ந்துதன் தேசிழந்து
மங்குவது போல மனமுடைவான்—அங்கண்
விளங்கிநிலா மீண்டும் விரிகதிர்கள் வீசத்
தெளிந்திடுவான் சற்றுமனம் தேர்ந்து 138

தெய்வத்தைத் தேடியுளம் நைந்துருகு மார்வலர்போல்
மைவைத்த கண்ணாள் வடிவழகைப்—பைய
மனத்தெழுதி மையல் மிகுந்தவசம் மேலிட்
டனைத்துந் தனையிழந்தா னன்று. 139

பாங்கன் மறையோன் பரிகசித்தான் பார்முழுதும்
தாங்கு மரசே தளர்ந்தீரே—ஈங்குத்
தவக்குலத்தார் கன்னியாந் தாழ்குழற்கு நெஞ்சம்
பவக்குறைதா னுற்றுநீர் பண்டு. 140

மறுநா ளிருமுனிவர் மன்னவனைக் கண்டெம்
இறைவகேள் யாந்தொடங்கும் யாகம்—நிறைவேறக்
கண்ணுவரி னாசிரமங் காத்தருகே வீற்றிருப்பாய்
தண்ணருள்மிக் கோயென்றார் சார்ந்து. 141

பாலிற் பழம்விழுந்த தென்றெண்ணிப் பார்த்திவனும்
சாலத் தகவுடைத்தா மிப்பணியைச்—சீலத்
தவஞ்சிறந்தி ரெற்களித்தீர் செய்தேன் தவமென்
றுவந்துரைத்தா னுள்ள மலர்ந்து. 142

வேள்விக்கு விக்கினங்கள் வாராமற் காப்பதற்கு
வாள்வேந்தன் வந்தானெனக்கேட்டு—யாழ்மொழியார்
மங்கலங்கள் கூறி மகிழ்ந்து வரவேற்றார்
புங்கவர்கள் பேசப் புகழ். 143

வேந்தற் குறவோ னெனமுன்னுள் வந்துற்ற
ஏந்த லிவனென் றவர்தம்முள்—தேர்ந்தவழி
மங்கை சகுந்தலையின் நெஞ்சம் மலர்ந்ததுவே
பங்கயமா யக்கதிரோன் பால். 144

மன்ன னருகிருக்க மாயப் படையவுணர்
பின்னிட்டுக் காட்டெல்லைப் பின்போக—வன்னி
வளர்த்தம் மறைமுனிவர் வேள்வி முடித்தங்
களித்தா ரமரர்க் கவிசு. 145

காதல் வயப்பட்ட காவல னெண்ணமெலாம்
சோதி மிளிர்வடிவச் சுந்தரியின்—மீதுசெலப்
பூம்பொழிலை நாடிப் புகுந்தான் புனிதநதித்
தீம்புனல்சேர் தீர்த்தக் கரை. 146

கோங்கு மலர்கண்டான் கொம்பனையாள் சிற்றிடைமேல்
தாங்கும் செழும்பொற்றனம்நினைந்தான்—ஆங்கலர்ந்த
காவியுடன் முல்லையுங் காந்தளுங் காரிகையின்
பூவியலைக் காட்டப் பொலிந்து. 147

வெண்மணலின் மீதிங்கு யான்கா ணடிச்சுவடு
பெண்ணணங்கு போந்த வழிகாட்டும்—திண்ணமிது
பைங்கொடிகள் சூழ்ந்தொதுங்கும் பந்தர்க்கீழ்ப் பூங்கொடிதான்
தங்குமிட மீதே தனித்து. 148

என்றுய்ந் தவளி னிணைச்சுவட்டைப் பின்பற்றிச்
சென்று னவளருமைத் தோழியரை—முன்றில்
அனையபசும் பந்தர்க்கீழ்க் கண்டா னகன்றுன்
வனமரங்கள் பின்தான் மறைந்து. 149

வெப்புநோ யாற்று திவணிருந்தாய் வேதியர்கள்
திப்பியமாம் வேள்வியினற்றீர்த்தத்தை—இப்பரிசாத்
தந்தார் தரித்திடுவா யென்றுர் அவரவளின்
சிந்தா குலந்தீர்க்கத் தேர்ந்து. 150

சகுந்தலைமேற் கூறுவாள் சாம்புவேன் வெம்மை
மிகுந்து வெதும்பவுடல் பூங்காப்—புகுந்தேன்
இருந்தென்னைக் காப்பீர் எனவவர்கள் கேட்டு
மருந்தெதுதா னென்றயர்ந்தார் மற்று. 151

தாமரையின் பாசிலையுந் தண்மை செயவில்லை
யாமதனை விசியு முன்மேனி—காமநோய்
கொண்டோர் கதைகளிலே கூறுவது போன்மெலியக்
கண்டோம்யாம் கண்டறியா நோய். 152

மன்மதனைப் போலழகர் மன்னர் பெருமானை
உன்மனதிற் கொண்டோ வுடனைந்தாய்—என்னென்
றறியோமவ் வுத்தமரைக் கண்டதின மன்றுன்
நிறையழிந்தாய்க் குற்ற நிலை. 153

வேதத் தவமுனிவர் வேள்வி செயுங்காலம்
காதல் உரைத்தநும கண்ணிணைகள்—ஆதலால்
நீவி ருரிவீரும் நித்த மணாளரென
ஆவ்துவே தக்க வறம். 154

தனிமையாய் நீயிருக்குந் தன்மை சிலநாள்
கனிமொழியா யுன்னில்யாங் கண்டோம்—வனிதையர்கள்
காதற் கருத்துளத்திற் கொண்ட குறிப்பதுவென்
ரேுதும் உலகிற் கவி. 155

உண்மை யொளிக்கா தெமக்குரைப்பா யுன்னுயிர்நேர்
நண்புடையோ மிங்கிருக்க நாணத்தால்—எண்ணம்
பலவாகி யேங்கிப் பதைக்கின்று யென்னே
நலமுனக்குச் செய்வமென நம்பு. 156

ஆழியில் வீழ்ந்தா ரதன்கரைவந் துற்ருற்போல்
தோழியர்கள் தேற்றத் துணிந்துமனம்—வாள்விழியாள்
புன்முறுவல் பூத்தாள் பெருநாண் புடைநெகிழத்
தன்னிலைமை சற்றே தெரித்து. 157

வெய்துயிர்த்துப் பின்னர் விளம்புவாள் வேந்தரளி
செய்யாரேல் நீங்கள் செயவேண்டும்—வையத்
துடல்விட்டு நீத்தார்க் குறவோர்க ளாற்றும்
கடனனைத்துங் கையற் றெனக்கு. 158

மன்னவரு மிவ்வாறு மையனேய் கொண்டன்றே
சொன்னத் திருமேனி சோர்கின்றார்—இன்னும்யாம்
ஐயப் படாதிவள்தன் ஆருயிரைக் காத்திடுவோம்
செய்யத் தகுவதொன்று செய்து. 159

ஈதுரைத்த தோழிமேற் கூறுவா ளெந்தலைவி
போதவிழ்ந்த பொங்குமரைப் பாசடையில்—தூதுசொலும்
ஓர்பாவைச் செம்பஞ்சு தோயுகிரி னாலெழுதத்
தார்வேந்தர் பாற்சேர்ப்பன் தாழ்ந்து. 160

மணிவண்டே மன்னவர்க்கிம் மங்கைநோய் கூறென்
றணிகொண்டு யான்றா தெழுதத்—துணியகிலேன்
என்னை யவரெள்ளி னெங்ஙனுயிர்வாழ்வேன்
உன்னுவீர் நீவிரதை யோர்ந்து. 161

கோதையவிழ் கார்க்குழலாள் கண்பனித்துக் கூறவிங்ஙன்
ஆதமிலி யாற்றே னுனையன்றிப்—பூதலமும்
மீதலமுஞ் சேர்ந்தளித்த மின்னொளியே யென்னையுன்
காதலனு யேற்றுயிரைக் கா. 162

என்றங் கரச னெதிர்வந்து தோன்றிடவே
வென்றிவிறல் வேந்தை வாழ்த்தியவர்—நின்றார்
பொலங்கொடியே நிற்கப் பொருயென் றவள்தன்
கலங்குதலைத் தீர்த்தான் கனிந்து. 163

சிந்தா மணியனையாய் செந்தா மரைத்திருதான்
வந்தா லிகழ்வார்யார் வான்மகளே—கொந்தார்பூஞ்
சோலையிலே சோதிக் குலதெய்வ மாவந்தாய்
மேலை யுலகம் விடுத்து. 164

ஊசற் கயிறெனயா னுடி யுளங்கலங்கி
ஏசற் றழியா தெனைக்காத்தாய்—மாயிலா
உன்னிதயத் துள்ளே யிருக்கும் பதமளித்தாய்
இன்னற் படாதெனக் கின்று. 165

தீந்தேன் மொழிபேசித் தேவி யிவள்வாழ
வேந்தே விதியளித்தீர் யாங்கவலை—தீர்ந்தோம்
வரமொன் றினியருள்வீர் வாழிநீ ரென்றார்
சிரமிசைநற் றேழியர்கை சேர்த்து. 166

அந்தப் புரத்தி லிருப்ப ரழகியர்கள்
இந்த எழின்மங்கைக் குற்றார்யாம்—அந்தரத்தில்
நின்று தளராமல் நீரோம் புகவென்றார்
இன்றுபோ லென்று மினித்து. 167

எனதுரிமைத் தேவி யிதுகாறு மானாள்
கனைகடல்சூழ் பூமடந்தை கண்டீர்—இனியொருத்தி
உந்தலைவி யாவா ளுறுதி யிதுவென்றான்
இந்துகுல வேந்த னெடுத்து. 168

பாங்கியர்கள் பின்னெழுந்து பெண்ணரசி பைங்கொடிமுன்
ஊளங்குமறைந் தோடுமிள மான்கன்றைத்—நீங்கின்றித்
தாயிடத்துச் சேர்த்துத் திரும்புவோந் தாழாமல்
நீயிருப்பா யீங்கென்றார் நேர்ந்து. 169

யானிங் குமைப்பிரிந் தெங்ங னிருப்பதென்று
தானும் புறப்பட்ட தையலவட்—கானதுணை
பராளும் வேந்தென்று பாவையர்கள் கூறிப்பின்
வாராய் நீயென்றார் வலிந்து. 170

கதிர்வெய்யோன் காய்கின்ற போதுநீ போதல்
மதியன்று மாதரசி யென்று—விதிமன்னன்
தேர்வுமொழி கூறியுந்தான் தேரா திருந்தாள்தன்
சோர்வகற்றச் சொன்னானின் சொல். 171

செங்கமலப் போதாமுன் சீறடிக ளென்மடிமேல்
தங்கும் படியிருத்தித் தைவந்துன்—அங்கக்
களைப்பை யறமாற்றிக் காதற்கா ணிக்கை
அளிப்பேன் பணிந்தென்றா ணங்கு. 172

பெரியோர் பணிவதையான் பார்க்கிற் பிழையாம்
தரியேன் தமியேன் தயைசேர்—அரசே
விடுவீரென் தந்தை விருப்பை அறியேன்
கடவே னவர்மொழியென் காப்பு. 173

வேலைப் பழித்த விழியா ளிதுகூற
மேலைத் தவத்தோர் விலக்கார்கேள்—சீலத்தார்
காதலர்க ளாய்வரிக்குங் காந்தருவ மென்றமணம்
ஏதமில தென்று னிறை. 174

தோழியரைக் கேட்டுத் துணிவே னெனநாணுல்
மாழ்கி யவளுரைக்க மன்னனவள்—கேழதரத்
தேனைச் சுவைக்க முயன்றுன் திகைத்தெழுந்தாள்
மானேர் விழியாள் மருண்டு. 175

தெய்வ மளித்தமண மீதாகுந் தேவியே
ஐய மினிவேண்டாம் ஆசறுசீர்—மெய்ம்முனிவர்
உன்றுதை யேற்பா ருவப்பா ரெனச்சொல்லி
மன்றுடி னுன்மீண்டு மன் 176

கனவயிரங் காலுங் கணையாழிப் பொன்னில்
தனது பெயர்மிளிரத் தாரோன்—மினுமணியை
தன்கரத்தி னீக்கிச் செறித்தான் தளரியலாள்
மென்கரத்தின் மீதுமணந் தேர்ந்து 177

யானும் வையத் தரசுரிமை இன்றுனக்குத்
தேனே யவித்தேனிச் சீராழி—மேனுள்யாம்
இந்நாளில் வேட்டமணத் தின்பை நினைவூட்டும்
தன்னே ரிலாதவணி தான். 178

இன்பக் கடலி லெழுந்த வமுதேநீ
மன்பதையைக் காக்கும் மகப்பெறுவாய்—இம்பர்
நிலவுலகில் யாந்துய்த்தோம் நீள்வானுங் காணு
அலகில் பெருவாழ் வடைந்து. 179

மன்ன னிவைகூற மங்கை புளகிதங்கொண்
டின்னும் பலநா ளிவணிருந்—தென்னைப்
புரந்திடுக என்றுட்குப் பூவேந்த ஞைந்து
பிரிந்திடுதற் கேதுரைத்தான் பின். 180

என்னுடைய வன்னையார் நோற்குமோ ரேமஞ்சேர்
நன்ஞேன்பு முற்றுகின்ற நாளதனில்—தன்ஞேடு
யானிருக்கு மாறெனக்குத் தூதனுப்பி யுள்ளாரால்
தேன்மொழியே என்கடனைத் தேர். 181

இன்பங் கனவாய தென்றவளங் கேசற்றுத்
தன்னெஞ்சில் தாங்காத் துயருற்றுச்—சொன்ஞளென்
இன்னுயிரா மேந்தலே யாற்றே னுமைப்பிரிந்து
பின்னுடலைத் தாங்கப் பெறின். 182

பிரிவாலே காதல் பெருகி வளரும்
தரியாது நெஞ்சந் தயங்கி—உருகேல்
உனைவிட் டுயிர்வாழ மாட்டேன்யான் மீள்வேன்
மனவேக மாய்நம்பி வாழ். 183

வேந்தன் விளம்பியவிவ் வன்புறையைக் கேட்டணங்கு
சாந்தஞ் சிறிதடையத் தானவளின்—காந்தி
விழிமுத்தைக் கையால் விலக்கித்தன் காதல்
ஒளிமுத்த மீந்தா னுவந்து. 184

பகலிற் பிரிந்திரவு பாரிக்கு மெல்லை
அகல்வானி லந்திப் பிறைதான்—சகவாழ்வில்
மாறுதல்கள் வந்தாலும் மன்னுமரு ளுண்டென்று
கூறுவது போன்றதுருக் கொண்டு. 185

மன்னன் பிரிந்து மறையவே மாதவத்
தன்னையோடு தோழியர்க ளங்குற்று—மின்னுமெழில்
மங்கையைக் கொண்டெழுந்தார் மான்கன்று துள்ளிவரத்
திங்கட் சிறுபிறைவான் கண்டு. 186

## துன்புறு காண்டம்

முன்னே முறுவலவிழ் முல்லை மலர்ந்தனையே
பொன்னே யனையமெய்யார் பொய்ப்பாரோ—கன்னல்தேன்
பாலா யெமைக்கலந்த பண்பாளர் வாராமுன்
மாலாய தென்னோ மனம். 187

ஆசிரமத் தோர்புறத்தி லன்றலர்ந்த முல்லைமணம்
வீசப் புலர்ந்து விளித்திங்ஙன்—மாசிலா
மாதரசி வாதிட்டாள் மன்னனுரை மெய்யென்று
தீதறியாத் தன்னெஞ்சில் தேர்ந்து. 188

காதலனைக் காணாது கண்கலுழுங் காரிகையங்
கேதும் புறத்தி லெதிர்நோக்காள்—வேதியரும்
தோழியரு மில்லாத போழ்தங்குத் தொல்லைசேர்
ஊழ்வினைவந் துற்ற தவட்கு. 189

முன்றி லடைந்தார் முனிவர் துருவாசர்
கன்றி வருஞ்சினத்தார் காய்ந்துரைத்தார்—இன்றிங்கு
வந்த எனைக்காணாள் வந்தித் துபசரியாள்
விந்தையிம் மங்கை விதி. 190

எவனை நினைந்ததிவ ளென்வரவைக் காணுள்
அவனே மறந்திவளை ஐயுற்—றவமதிப்பான்
என்று சபித்தவ ரேகினுர் தோழியர்பின்
சென்றிரந்தார் சேம வரம். 191

ஆறிச் சினந்தணிந்த வம்முனிவர் சாபமொழி
மாறி மறைவதிலே யானுலும்—தேறுவீர்
ஆழி யடையாள மாகு மவட்கதனுல்
வாழ்வுண் டெனவளித்தார் வாக்கு. 192

சாப மறியாச் சகுந்தலைக்கந் நங்கையர்கள்
ஆபத் துறுமு னதையுணர்த்தில்—தாபம்
தரியா துயிர்விடுவா ளென்றஞ்சித் தாமஃ
துரையா திருந்தனர்நன் கோர்ந்து. 193

மன்ன னளித்த மணியாழி மென்விரலில்
மின்ன வணிந்தவம் மின்னிடையாட்—கின்னல்
வருமிடத்துத் தீர்க்கும் வகையுளதா மென்றப்
புரிகுழலார் கொண்டார் பொறை. 194

தென்னுட்டு வேந்தர்மேற் போர்விளைத்த தெவ்வராம்
பன்னுட் டரசர் படைவென்று—பொன்னுட்டுத்
தேவர்கோன் போலத் திகழ்ந்தான் துடியந்தன்
யாவர்க்கும் மேலா மிறை. 195

அப்போரை மேற்கொண் டவன்வெற்றி யுற்றநாள்
வெப்போ டெதிருற்ற வில்லம்பில்—தப்பினுன்
ஆனுல் மறந்தா னதன்முன் நிகழ்ந்தவெலாம்
தேனுர் சகுந்தலையுஞ் சேர்த்து. 196

இந்நிலையில் மங்கையவ ளேங்கிப் பலநாட்கள்
கொன்னே கழித்தாள் குவலயத்து—மன்னனவன்
வாராமல் வாளா விடுத்தானே வென்றழுங்கித்
திராக் கவலையாற் றேய்ந்து. 197

துயருற்ற தோழியர்தாம் தோன்றற் குணர்த்தி
மயலுற்ற மாதரசி மாளா—துயவவளைக்
கொண்டேக வேண்டுமெனக் கூறுதற்கோர் தூதனுப்ப
உண்டோ வழியென்று ரோய்ந்து. 198

திருமன்னன் தேவிசில திங்கட் பருவம்
கருவுற் றிருந்தவகை கண்டு—புருவின்
குலம்வாழ்க வென்றுவந்து கோதமியார் கூற
மலர்ந்ததுயிர் மீண்டவட்கு வந்து. 199

புனிதநீர்த் தீர்த்தங்கள் போயாடி வந்தார்
முனிவர் குலபதிதம் முன்னர்த்—தனையை
சகுந்தலையைக் கண்டுவந்தார் தாள்தொழுது நின்றுட்
சுகங்குழைந்தங் காசியளித்து. 200

நாணத் துடனின்ற நங்கை நிலையறிந்து
பேணும் பெரியாள் பணிந்துரைத்தாள்--தோணலத்தான்
பூவுலகைக் காக்கும் பொறையான் றுடியந்தன்
தேவியிவ ளானுள் தெரிந்து. 201

கந்தருவர் போலவிவர் காதலர்க ளாகிமணம்
தந்தம் மனமிசையத் தாந்தேர்ந்தார்—தந்தைநும்
சம்மதத்தைந் தந்திவட்குச் சாற்றுவீர் வாழ்த்துமொழி
இம்மைச் சுகமளித்தற் கின்று. 202

யானினைத்த வாறேயிஃ தாயிற் றெனவுரைத்தார்
ஞானத் தபோதனர் ஞாலமாள்—கோனுக்கே
என்மகளை யேற்பிக்கும் தெய்வ மெனவுணர்ந்தேன்
நன்னுதலை முன்வளர்த்த ஞான்று. 203

அரசற் குரியா ளிவளை யழைக்க
வருதற் கவன்தா மதித்தும்—பரிவதிலேன்
என்கடனைச் செய்யத் துணிந்தே னிவளையவன்
நன்னகரிற் சேர்க்க நயந்து. 204

நாளைப் புறப்படுவாய் நங்கையே மாமன்னன்
ஆளும் அணிநகர்க்கு யாம்செய்யும்—வேள்வி
முடியு முதயத்தில் மூதாட்டி யாருன்
உடன்வரநீ செல்க வுவந்து. 205

இருள்படர்ந்த கானூ டிரவி யெழுமுன்
துறைபடிந்த தூய மறையோர்—சுருதி
பலவோதித் தீவேட்டுப் பாசவிருள் தீர்வார்
குலபதிமுன் கூப்புவர்தங் கை. 206

தருமநெறியாய்ந்த சாரங்க தேவர்
அருமைத் தவத்த ரனுசர்—இருவரையும்
மங்கை சகுந்தலேயை மன்னன்பா லுய்க்கவெனத்
துங்க முனிபணித்தார் சூழ்ந்து. 207

தூயநீர் தோய்ந்து திருவனேய கோலத்தாள்
தாயர் நமர்பலரும் வாழ்த்துரைக்க–வாயில்முன்
நின்றுள்நற் றோழியர்கள் நேர்ந்தவணி செய்தார்கள்
அன்றலர்ந்த பூக்கொண் டமைத்து. 208

பொன்னலங்கல்போன்றதோர்போர்வை யுனக்கின்று
மன்னும் வனமரமொன் றீந்ததுகாண்—மன்னன்
அவையத்தோர் கண்டறியா ஆடை யிதுவென்
றவரளித்தார் ஒப்பனேசெய் தங்கு. 209

இனியெந்நா ளுங்க ளருங்கரத்தா லிங்ஙன்
நனிசெய் நறுமாலே காண்பேன்யான்—எனவுரைத்துக்
கண்ணீர் கலங்கினுள் காமர் மலரிதழ்மேல்
தெண்பனிநீர் தேங்குவதை யொத்து. 210

மங்கலமா யிந்நாளில் மன்னனிடஞ் சேர்தியால்
எங்கள் பிரிவா லிரங்கற்க—மங்கியெம
துள்ள மழிந்தாலு மாற்றி யுனதின்பம்
உள்ளுவோ மென்று ருடைந்து. 211

முற்றத் துறந்த முனிவ ருளங்கரைந்
தற்றைத் தினத்தி லவர்தளர்ந்—துற்றநிலை
கொண்டுலகிற் பெற்றமனம் பித்தென்ற கூற்றுண்மை
கண்டார்முன் காணு தவர். 212

மூதாட்டி யோடு முனிவர் வரவவரின்
பாதார விந்தம் பணிந்தணங்கு—தாதையே
என்றழுதாள் தேம்பி எழும்பாள் அடியற்ற
கன்றுமரம் போன்றுள் கலுழ்ந்து. 213

பொதியத்துச் சந்தனக்காப் புன்கன்றைப் பேர்த்துப்
புதிய நிலத்திற் பொருத்தும்—விதியுண்டேல்
அஃதொக்கு மென்வாழ்வென் றேக்கத் தழுந்தினளாய்
இஃதுரைத்தாள் மங்கை யெழுந்து. 214

மாசுதீ ரங்கி வலம்வருவாய் மன்னுலகை
நேசமுடன் காக்குமகன் நீபெறுவாய்—தேசுடனே
உன்கணவன் வாழ்கென் றவரவளின் உச்சிமுகர்ந்
தென்மகளே யென்று ரணைத்து. 215

வனத்து மரங்கா ளுமக்குநீர் வார்த்த
பினர்த்தா னுணவருந்தும் பெற்றி—தனைக்கொண்டாள்
ஏகுவா ளின்றுதன் எந்த லிருக்குமிடம்
போக விடையளிப்பீர் பூத்து. 216

கொடிகாள் செடிகாள் குறுவியர்வோ டுங்கள்
அடிவேரில் அன்பொடுநீர் ஊற்றி—வடிவுடையீர்
பூக்கும் பொழுது புதுவிழாக் கொண்டாடும்
வாட்கணுட் சென்றுரைப்பீர் வாழ்த்து. 217

என்று முனிவ ரியம்ப வனத்திடையே
துன்றுமரம் சூழ்கிளைசேர் பல்லிகள்தாம்—நன்ருகும்
என்பனபோல் நற்சகுனமேப்ந்திசைக்கத் தீர்ந்தையம்
துன்பந் துடைத்தார் தெளிந்து. 218

கீத மினிய குயில்கூவக் கேட்டங்கு
வேத முனிவர் விளம்புவார்—ஈதுரைக்கும்
வெய்யில் மறைத்து வியன்வழியில் தண்ணிழலைச்
செய்யும் மரங்களெனத் தேர்ந்து. 219

வாவித் தடங்கள்மேல் வந்துலவு மென்காற்று
மெவியர விந்தங்கள் உன்னடியைச்—சேவிக்கச்
செய்யுந் திறங்கண்டு செல்வாய் வழியெங்கும்
தெய்வந் துணையென்று தேர். 22

ஓமத்தீ வேதிகையை ஒண்ணலத்தாள் சுற்றிவந்
தேமத் தவத்தா ரெதிர்பணிந்து—வாம
விழிகலங்கி வெய்துயிர்க்குந் தோழியர்கைப் பற்றித்
தழுவினுள் தன்மார் பணேத்து. 221

ஆசிரமத் துள்ளா ரனேவர் விடைபெற்ருய்
மாசிலா மங்கை யினிவிரைந்து—வீசுகதிர்ச்
சூரியனூர் மேலெழுமுன் செல்வமெனச் சொன்னுள்மேல்
ஆரியைநன் மூதாட்டி யாள். 222

புறப்படுமுன் யான்சென்று புள்ளிமான் கட்கும்
சிறப்புடன்யான் காத்த செழுந்தண்—நறைக்கொடி வெண்
சோதிமலர் முல்லேக்குஞ் சொல்லிவரு வேனென்று
மாதரசி புக்காள் வனம். 223

திரும்பி வருவாள்பின் துள்ளிச் சிலமான்
விரும்பித் தொடர விளித்துப்—பரிந்தும்மை
என்னருமைத் தோழியர்கள் காப்பா ரெனச்சொல்லித்
தன்பொறுப்பைத் தந்தா ளவர்க்கு. 224

யானுமுன் தோழியரு மாசிரமத் தெல்லேக்குள்
தேன்சொரியும் பூக்கள் திரைபுரளத்—தான்பாயும்
ஆற்றின் கரைவந் தனுப்புவோ முன்னேயெனத்
தேற்றினர் தீஞ்சொல் முனி. 225

மூதாட்டி யோடிம் மறையோருன் முன்செல்லப்
போதாய் மகளேநீ போகுங்கான்—பாதையினில்
கண்ணீர் சொரிந்தாலுன் காலிடறிக் கற்களாற்
புண்படுமென் ருரவரும் போந்து. 226

ஆற்றுக் கணித்தவர்கள் வந்தபின் மாமுனிவர்
சாற்றினூர் சாரங்க தேவர்க்கு—மாற்றறியாப்
பொற்றிருவாங் கற்பினளைப் போர்வேந்தற் கீந்தேன்யான்
சொற்றிறம்பா தேற்கவெனச் சொல். 227

ஏனை மனைவியரைப் போலிவளை யேற்றுலகக்
கோன்காக்க வேண்டுமெனக் கூறுக—யானிதன்மேல்
கேட்க வுரிமையிலை கேளேனென் அந்தரங்கம்
காட்டி மொழிகென்ருர் கண்டு. 228

தழுவித் தனையைக் குரைத்தாரிவ் வார்த்தை
வழுவா தொழுகுவாய் வாழி—விழுமியோர்
ஆசி பெறநடப்பா யன்பா யிணையோரின்
நேசம் பெறுக நிறைந்து. 229

கணவன் சினமுறினுங் கன்று துளத்தில்
தணிவிப்பா யென்றுந் தயவாய்ப்—பணியினரை
ஆதரிப்பாய் பொல்லா விறுமாப் பகற்றுவாய்
மாதர்க் கிதுவளிக்கும் மாண்பு. 230

மீண்டுமெழில் மெல்லியலாள் மாமுனிவர் கால்நனைத்
தீண்டிவ் வனத்தை யினியென்று—காண்பதியான்
என்றழுதாள் உன்கணவன் ஏமத் தவமேற்கும்
அன்றடைவீ ரிங்கென்ரு ராய்ந்து. 231

தோழியர்தந் தோளோ டணைத்தவளைப் புல்லியுன்
ஆழி மறவா தணிந்திடுவாய்—கேழ்கிளரும்
அவ்வணியாற் றிண்ண மரச ருனையறிவார்
செவ்விதாய் வாழ்கென்ருர் சேர்ந்து. 232

இதைக்கேட் டெனதுள்ள மையுறவு கொண்டு
பதைக்கின்ற தென்ருளப் பாவை—உதுக்காண்பேர்
ஆதரத்தாற் கூறினேம் அஞ்சற்க வென்றுரைத்தார்
போதனைய கண்ணுர் புனைந்து. 233

குலபதியீர் யாங்கள் குவலயத்தோ ளூந்
தலைநகர்சேர் சாலையினி சார்ந்து—செலவே
அனுமதிப்பீ ராசிரமத் தெல்லை யிதுவென்
றனுசர் பணிந்துரைத்தா ராங்கு. 234

தவமே புரிந்திளைத்த தந்தையே யென்பாற்
கவலா திருக்கவெனக் காந்தி—உவாநேர்
முகத்தா ளுரைத்தாள் முனிவரென துள்ளத்
தகத்தாய்நீ என்ரு ரணைத்து. 235

நியடைய வேண்டியான் நேர்ந்தவணம் நன்மையெலாம்
வாயவருள் பெற்றரசி வாழ்ந்திடுவாய்—போய்வருக
என்ருர் தவமுனிவர் ஏற்றவ் வரந்துணையாச்
சென்ருளச் செய்ய திரு. 236

சாலை வெயிலிற் றளர்ந்த வெழிற்பாவை
ஆல நிழன்மறைந் தாங்கொதுங்கச்—சோலைக்குட்
கண்ணுவருங் கன்னியரும் புக்கார் தமதருமைக்
கண்மணியைக் காண்பதினி யென்று. 237

ஆசிரமஞ் சேர்ந்தபி ஞறித் தவத்தமர்ந்த
மாசிலா மெய்ம்முனிவர் மங்கைமகட்—பாசம்
இனியெமக்கேன் மாநிதிய மீந்தே முரியாற்
கெனவமைந்தார் சாந்திமன மேய்ந்து. 238

பாதை யொருபுறத்திற் பாய்ந்துமிளிர் மாலினியை
மு தாட்டி காட்டிமலர் மொய்குழலாய்—ஈதுனைப்போல்
தன்கணவற் றேடிவழிச் சாருந் திறங்கண்டாய்
உன்றளர்ச்சி நீங்கென்ரு ளோர்ந்து. 239

அகவு மயிலினங்க ளாலித்துன் சாயல்
மிகவாசை யாற்காண மேவித்—தொகைவிரித்து
நிற்பனவால் நோக்குவாய் நீலக் கடைவிழியாய்
அற்புதநின் காட்சி யளித்து. 240

மாமரங்கள் தோறும் மகிழ்ந்து குயில்கூவித்
தாமிசைக்குங் கீதந் தனைக்கேளாய்—சோமகுலத்
துங்கத் துடியந்தன் தூதனுப்பி னானென்று
திங்கட் பிறைநுதலாய் தேர். 241

நடந்த வழிநெடுக நங்கைக்கிவ் வாறு
திடங்கூறி மூதாட்டி தேற்றக்—கடந்தாள்
மனஞ்சோர்ந் துடல்சோர்ந்த மின்னிடையாள் மட்டு
வனஞ்சூழ்ந்த முல்லை வரம்பு. 242

வறண்டுலர்ந்த வன்பாலை வந்தவர்க ளங்குக்
கறங்குசுழல் பேய்த்தேரைக் கண்டு—பிறங்குவெளித்
தண்ணீரை நாடித் தவித்துத் தொடர்ந்தார்கள்
தெண்ணீர்மைக் கானற் சலம். 243

பாலைக் கனல்கடந்து பாதங்கள் நொந்தவராய்
ஏலக் குழலாளு மேனையரும்—கோலத்
தடமருங்கு சூழ்ந்து தருநிழலைக் காட்டும்
இடமருதஞ் சேர்ந்தா ரெதிர்ந்து. 244

பார்க்கும் பரப்பிற் பசுமை வளஞ்செறிய
ஆர்க்கு முழவ ரகல்வயல்கள்—காக்கப்
புதுச்செம் புனல்பாய்ந்து பொங்குபுல மெங்கும்
கதிர்ச்செந்நெல் கண்டார் களித்து. 245

தாமரைப்பூம் பொய்கையுந் தண்ணிழலும் சிற்ருறும்
காமர் மலர்க்காவும் கண்டங்குச்—சோமத்
திருப்பெயரைப்பெற்றபுகழ்த் தீர்த்தமதைச்சேர்ந்தார்
பொருப்பனைய கோயிற் புறம். 246

வழிபா டியற்றவவர் வானவர்தோய் வாவி
முழுகினுர் மொய்குழலாள் மூழ்கி—எழுமிடத்
தாழி தனையிழந்தா ளஃதறியா தாங்ககன்ருள்
சூழ்விதியாற் சோர்வுற் றயர்ந்து. 247

கரும்படுக்கும் காட்சிக் கவினுலைப் பாங்கர்
சுரும்பொலிக்கக் கன்னல் சொரிந்து—விருந்தளித்
தாதுலரைக் காக்கு மறச்சாலை தாங்கடந்தார்
வேதியர்வாழ் வீதியவ ருற்று. 248

கண்ணுவரின் மாணவர்கள் கண்டுவர வேற்றவர்கட்
குண்ணக் கொடுத்தங் குபசரிக்கக்—கண்ணயர்ந்து
காலைப் பொழுதிற் கதிரோ னொளிபரப்பச்
சாலை வழியடைந்தார் சார்ந்து. 249

மன்ன னரசாளும் மாநகர்மேல் ஓங்குவன
மின்னு மதிற்கொடிகள் வீறுடனே—சொன்ன
கிரிச்சிகரம் போன்றெழுநற் கோபுரங்கள் வேந்தன்
புரிச்சிறப்பைக் காட்டப் பொலிந்து. 250

பொன்னுலகத் தோர்க்கும் புதுமை வியப்பளிக்கும்
நன்னகரத் தாவணந்தை நண்ணியவர்—தன்னவில்தோள்
வென்றிவய வேந்தன் வியன்மண் டபம்நாடிச்
சென்றனர்பல் சேவகரைக் கண்டு. 251

வாயி லடைய வலக்கண் மிகத்துடிக்க
ஆயதோர் தீதென் றதற்கஞ்சிச்—சேய
இதழ்வாயாள் கேட்க இனிப்பயமே னென்றுள்
மதுரமொழி மாதவத்தா ளங்கு. 252

நாளவையை நீங்கி நகர்க்கதிபன் நாரியர்வாழ்
மாளிகையின் மாடத்தில்மெல்லியலார்—யாழிசைத்துப்
பாடியதைக் கேட்டுப் பரவசமுற் றுனெனினும்
வாடினன் மாலுற்றங் கோர்ந்து. 253

வாழ்விற் சுகமனைத்தும் வாய்த்திருந்தும் மாந்தருக்
கூழ்முற் பிறப்புகளி லுற்றநட்—பேழிசையைக்
கேட்கினும் கேழ்கிளரும் காட்சியைப் பார்க்கினும்
தேட்டந் தரும்வாட்டஞ் சேர்த்து. 254

கஞ்சுகன் மன்னனிடம் வந்ததொருநற் காரிகையும்
விஞ்சு தவத்தரிரு வேதியரும்—செஞ்சடைசேர்
மூதகவை யாளும் முறைமன்றம் சேர்ந்தாரென்
றோதினன் செவ்வி யுணர்ந்து. 255

அழைத்து வருகவவர்க் கான்றவுப சாரம்
இழுக்கா தியற்றியவ ருள்ளம்—களிக்க
எனமொழிந்தான் ஆசிரம வாசிகளுக் கேற்ற
விநய விதியறிந்த வேந்து. 256

முனிவரைக் கண்டுமுடி மன்னனவர் முன்தாழ்ந்
தினிய மொழிகூறி யேத்திக்—கனஞ்செய்யக்
கண்ணுவராம் மாமுனிவர் கட்டளையால் வந்தோமென்
றண்மித் துரைத்தா ரவர். 257

பல்லாண்டு வாழ்கநீ பார்த்திவனே எந்தலைவர்
நல்லாசி கூறி நவின்றார்கேள்—வெல்புகழாய்
இம்மங்கைக் காதலனாய் நீமணந் தேற்றளித்த
செம்மொழியைக் காத்திவளைக் கா. 258

நீவி ரிருவிரும் நேர்ந்தவத் தெய்வமணம்
தாவில் பெருமை தருந்தகைத்தால்—பூவுலகைக்
காக்கவொரு சேயைக் கருத்தரித்தா ளுன்குலத்துக்
காக்க மளிக்குந் திரு. 259

அழகே உருவெடுத்த அவ்வணங்கைக் கண்டு
விழையும் மனத்தை விடுத்தான்—பழைய
நினைவில்லா னீதி நெறியான் பிறர்தம்
மனைவியரைக் காமுறு மன். 260

யானறியே னிம்மாதை யென்செய்வே னிந்நிலையிற்
கானுறைவீர் கர்ப்ப வதியிவளை—யான்வரித்தல்
ஆகுமோ வென்று னரச னவளதுகேட்
டாகந் துடித்தா ளழுது. 261

மாசிலா மங்கையை மாதவத்தார் வாழுமெம்
ஆசிரமத் தன்று மணந்துநீ—கூசாமல்
உண்மை ஒளிக்கின்று யுன்னெஞ் சறிந்திவளைப்
புண்ணுக்கி னுய்சொற் பிழைத்து. 262

சாரங்க தேவர் சினந்திதன்மேற் சாற்றுவார்
பாரெங்கும் பாழ்சூதைச் சாத்திரத்தின்—ஓரங்க
மாக்கொண் டரசர்குலம் வாய்மை பிறழ்வததன்
போக்காகும் புன்மை நெறி. 263

புருவின் குலத்துதித்தோர் பொய்க்குத் துணியார்
இருநிலத்தார் இஃதறிவார் ஈண்டுப்—புரிசடையீர்
என்மேற் பழிசுமத்த லேற்கா துலகென்ருன்
தன்னெஞ்சைத் தார்வேந்த னுய்ந்து. 264

தூய முனிவர் தவத்தின் சுடரிவள்காண்
வாய்மை வழுவாட் குனதுசெவி—சாயென்று
மன்னற்கு மூதாட்டி கூற மனமிசைந்தஃ
தென்னென்ருன் மக்கட்கிறை. 265

கண்டுண்ட சொல்லாய் கடிமணத்தைத் தேர்ந்துநீர்
கொண்ட முறையெடுத்துக் கூறுவாய்—வெண்டிங்கள்
வஞ்சத் தவற்கென் றவளுரைக்க வார்ந்தனநீர்
கஞ்ச முகத்தாள்தன் கண். 266

நாதா வெனைமணந்த ஞான்றளித்த நின்பெயர்சேர்
சோதிச் சுடராழி காண்கவெனக்—கோதிலாள்
கைவிரலைக் காட்டவதைக் காணாள் பதைபதைத்து
வெய்துயிர்த்தாள் வீழ்ந்தாள் வியர்த்து. 267

அழுந்திநீ வாவிநீர்த் தோய்ந்தவிடத் தாழி
இழந்தாயோ என்மகளே ஈண்டின்—றிழிந்தபழி
மூண்டதே யென்றணைத்தாள் மூதாட்டி மெய்ம்முனிவர்
மீண்டுரைக்கு மாறறியார் மேல். 268

கான்யாறு வெள்ளம் பெருகக் கரையிடித்துத்
தான்கலங்கும் நீரோடு தன்னருகில்—வானுயர்ந்த
நன்மரத்தை வீழ்த்துவதை ஒக்குமிந் நாரியென்பால்
வன்பழியைச் சொற்றதென்றான் மன். 269

புண்ணில்வேல் பாய்ந்ததுபோற் போர்வேந்தன் சொல்லவளின்
உண்ணெஞ்சி னூடேவுயிர் வதைக்கத்—திண்மைசேர்
கற்புடையாள் காயுங் கடுஞ்சொல் அறியாதாள்
செப்புவாள் உள்ளஞ் சிதைந்து. 270

வஞ்ச மறியா வனிதை யெனைமணந்து
செஞ்சொற்கள் தேன்போற் பகர்ந்தின்று—நஞ்சுதோய்
வெஞ்சொற்கள் கூறினுர் வேறில்லை சான்றெனக்குத்
தஞ்சமாந் தெய்வந் தவிர்த்து. 271

முனிவர் தலைவர் மொழிப்படியாம் வந்தோம்
இனியடைவோம் எம்வழியிம் மங்கை—தனைவிட்டிங்
கென்ரு ரனுச ரெழுந்தார் சிரேட்டமுனி
பின்ருெடர்ந்தாள் மூதாட்டி பேர்ந்து. 272

யானிவளை யேற்கே னிதுதிண்ண மென்றரசன்
தான்மொழியத் தாழ்குழலாள் எங்குறுவேன்—நான்மறையீர்
எந்தையிடத் தும்மோ டுடன்வருவே னென்றுரைத்தாள்
அந்திப் பிறைநுதலா ளங்கு. 273

நன்றன் றெனத்தடுத்து நாரியர்க்குத் தங்கணவர்
அன்றிப் புகலில்லை ஆயுமிடத்—தென்றுமுனி
சாரங்கர் கூறவவள் சார்புதரும் கொம்பில்லா
ஈர்ங்கொடிபோல் வீழ்ந்தாளங் கிற்று. 274

அரசற் கருகிருந்த அந்த ணமைச்சர்
பரிவுற் றிரங்கியிப் பாவை—கருவுயிர்க்கும்
மட்டு மநாதையெனக் காப்பேன் மகிபவிதைத்
தட்டா தருள்கென்ருர் தாழ்ந்து. 275

யான்பிறந்த வன்றே யநாதையென அன்னையே
ஏன்துறந்தா யென்னைநீ இங்கிருத்தி—வான்புகுந்தாய்
என்றுளம் மென்கொடியங் கேந்தி யவளையெடுத்
தொன்றாய் ஒளிர்ந்ததோர் மின். 276

## இன்புறு காண்டம்

தேவர் திருக்குலத்தின் தாதை மனுக்குலத்தார்
யாவர்க்கும் மூதாதை யைம்பூதம்—ஏவல்
புரியத் தவஞ்செய்து பூமனருள் பேற்றேன்
மரீசி யெனும்புத்தேள் மன். 277

பனிவரையிற் பொற்கிரணம் பாய்சிகரச் சார்பில்
முனிவர் குழாம்வழுத்தும் முன்னேன்—புனிதத்
துணைவி யதிதியெனுந் தேவியுடன் வாழ்ந்தான்
இணையிலாச் சோலை யிடை. 278

ஆண்டுச் சகுந்தலையைத் தன்மார் பணைத்துவிண்
மீண்டு மறைந்தெழுந்த மேனகை—மாண்புமிகும்
தேவி யதிதியின் சேவடியைச் சார்ந்துரைத்தாள்
ஆவிசோர்ந் தாளுய்யு மாறு. 279

கருக்கொண்டா ளென்மகள் காசினியைக் காக்கும்
புருக்குலத்து மன்னவன் பொய்க்கூ—ளுரைத்தன்
றிவளை மணந்திந்நாள் ஏற்கான் எளியேம்
கவலை தவிர்த்தருள்வாய் காத்து. 280

குறையிரந்த மேனகைக்குக் கூறி யபயம்
திறல்படைத்த கற்பினள் தேற்ற—மறையவர்வாழ்
தேன்பிலிற்றுஞ் சோலையிற் றன்மகளைச் சேர்த்திருத்தி
வான்மறைந்தாள் விண்ணகமின் மாது. 281

அதிதி யளித்தபே ராதரவால் வாழ்வில்
கதியுண் டெனத்தெளிந்து கண்டு—மதிநலத்தாள்
வானருவி பாய்ந்தொலிக்கும் வன்னமலர்க் காவைகிப்
போனதுளத் தோராள் பொறுத்து. 282

சித்திரைத் திங்களிற் சித்திரை நன்னாளில்
உத்தமமா மோரையி லோர்மகனைப்—பெற்றெடுத்தாள்
பார்த்திவனற் றேவியென வேதியர்தம் பன்னியர்கள்
ஆர்த்தா ரதிதிக் குரைத்து. 283

உலகத்தி லீடின்றி யோங்கு புகழ்பெற்
றலகில் பலவான் டிவனுண்—டிலகுவான்
என்று மரீசி யிருந்தவத்தோ னம்மகற்
கன்றளித்தா னுசி யறிந்து. 284

வசந்தவேள் பார்மீது வந்துமகிழ் காலம்
அசைந்தாடித் தென்றலறி விக்கட்—பசுந்தளிராம்
புத்தாடை போர்த்துநறும் பூச்சொரிந்து நன்மரங்கள்
எத்திசையுங் காட்டு மெழில். 285

வேந்தன் துடியந்த ணூளும் வியனகர
மாந்தர் விழாவெடுத்து மன்மதற்குச்—சாந்திசெயும்
கோலத்தைக் கண்டுகளி கூர்ந்திடுவர் கந்தருவ
மேலுலகத் தாரும் வியந்து. 286

மன்றிற் சகுந்தலையை ஏற்க மறுத்தமனன்
அன்றுமுத லுள்ள மழிந்துவகை—யின்றி
இளவேனில் வந்திறுத்து மின்பம் நுகரான்
தளர்வுற்று நெஞ்சந் தனித்து. 287

வையத் தரசன் பெயர்பொறித்து வைரமணி
பெய்திழைத்த பொன்னுழி யெங்ஙனமுன்—கைவந்த
தென்றுநகர்க் காவலர்கள் கேட்டார்க ளேதிலான்
நின்றுவிலை கூறுமிடம் நேர்ந்து. 288

மீன்பிடிப்ப தென்றொழில் மின்னு மணியாழி
யான்பிடித்த மீன்வயிற்றி லின்றெடுத்துக்—கோனகரில்
விற்கக் கொடுவந்தே னென்றானவ் வீரர்கேட்
டொற்றர்க் குரைத்தா ருடன். 289

ஆயு ளுனக்கிறுதி யாயிற் றெனவுணர்வாய்
தீயவற்றை நாளுந் துணிந்துசெயும்—மாயஞ்சேர்
கள்வனே என்றவனைக் காவற் சிறைப்படுத்தி
உள்வைத்தா ரன்றவர்க ளுய்த்து. 290

மன்னன் முறைவழங்கு மன்றத்தி லிச்செய்தி
பின்ன ரவர்விளம்பப் பேதையோன்—றன்னுரையை
ஏற்றரசன் மேலு மிருநிதிய மீந்தவனுக்
காற்றினன் நன்றி யறிந்து. 291

கணையாழி கண்டதும் காதலித்து முன்னாள்
மணநேர் சகுந்தலையை மன்னன்—கணமதனில்
தன்மனத்திற் கண்டானல் தான்மறந்த எல்லாமுற்
சென்மத்தி லுற்றனபோற் சேர்ந்து. 292

கன்னிப் பருவத்தாள் காதற் கவின்முகிழ்த்துப்
புன்முறுவற்போதவிழ்ந்தபொற்பினள்—பொன்விரலில்
தன்னழி சேர்த்துத் தனித்தவளைத் தான்மணந்து
சொன்ன மொழிநினைந்தான் சோர்ந்து. 293

சோர்குழலாள் கண்ணீர் சொரிந்து பவழத்தை
நேரிதழ்சேர் வாய்திறந்து நேயமுடன்—நீரளித்த
ஆழி யிதுவென்று காணு தவள்கலங்கி
வீழ்ந்த துயர்நினைந்தான் வேந்து. 294

ஆற்றிலவள் மூழ்கியவ் வாழி யிழந்தவகை
சாற்றிய மூதாட்டி சான்றுரைபொய்க்—கூற்றென்று
தான்கருதித் திராப் பழியுரைக்கத் தீதிலாள்
வான்மறைந்த வாறுணர்ந்தான் மன். 295

திருவனைய தேவிக்குத் தானிழைத்த தீய
வெருவந்த வெய்ய செயலைப்—புருவழியோன்
உன்னி யொருவகையுந் தேரா னதன்மாயம்
தன்விதியா மென்று தளர்ந்து. 296

நாளு மவளை நினைந்தரச னைந்துருகி
ஆளுங் கடனொழிந்த அவ்வெல்லை—வாள்விழியாள்
ஈடி லெழிலுருவ மேய்க்கும் படமெழுதி
ஊடுவான் காணு துயிர். 297

உருவெளியாந் தோற்றத் துவந்தவளைக் காண்பான்
மரைமலர்ச் சோதி வடிவாய்ப்—பிறைநுதலாள்
தோழியர்க ளோடுமுனர்த் தோன்றிப்பின் தன்னோடு
சூழ்பந்தர்க் கீழிருக்கச் சேர்ந்து. 298

தேடித் திறல்வேந்தன் தேவியைக் காண்பதற்கு
நாடெங்குந் தூதேவி நற்றவத்தார்—காடுறையும்
ஆசிரமந் தோறு மனுப்பினுன் ஆரணத்தின்
தேசுடைய அந்தணரைத் தேர்ந்து. 299

இம்முயற்சி யாலங் கொருபயனு மின்ருக
இம்மையினில் தானவளை யெய்துவது—செம்மனத்தார்
அல்லாதார்க் கவ்வுலக மில்லாத வாறுபோல்
ஒல்லா தெனவுடைந்தா னேய்ந்து. 300

அரசன் மனந்தெளிய ஆன்றோரும் மற்றும்
உரிமை யமைச்சரும் ஒது—மறையோரும்
எத்துணையுங் கூறியு மேக்கங் குறையாதான்
பத்தாண்டு சென்றும் பரிந்து. 301

அந்தரத்தி னின்றோ ரமர னிறங்கிவந்
திந்திரன்றன் தூதன்றா னென்றுசொலி—வந்தித்துப்
பார்மெச்சும் பார்த்திவநின் போர்த்திறனை நாடினன்
கார்மன்ன னென்றான் கணித்து. 302

குருநிலத்தின் சீரைக் குலைக்க அசுரர்
செருவெல்லற் காயபடை சேர்த்துத்—திரிவரால்
தேவர்கோ னின்னையே தேர்ந்தான் படைத்துணையா
ஆவனநீ செய்க வறிந்து. 303

இமையவர்கோன் வேண்டு முதவி யிதுவென்
றமர னுரைக்க வதுகேட்—டமைவேன்
புரந்தரனு ரேவற் பணிக்கென்றான் பூவேள்
சிரந்தனிலே யேற்றுச் செயற்கு. 304

விசும்பூடு வந்த விமானத்தில் வேந்தன்
பசும்பூ ணணிந்து பரிதி—அசைந்துகதிர்
வீசி யெழுந்ததென விண்மண்டல மடைந்தான்
காசினிசூழ் மேகங் கடந்து. 305

தேவேந் திரனவனைச் சீரோ டெதிர்கொண்டு
மாவேந்த னுந்தைபல மாண்புமிகும்—சேவை
புரிதற் கிவண்வந்து பெற்றான் புகழும்
மரபைக்கா வென்றான் மகிழ்ந்து. 306

இடியோடு மின்ன லியங்குவது போல
வெடிகுண் டெறியும் விமானப்—படைகொண்
டசுரர் கணத்தி னரணழித்து மீண்டான்
திசைபோற்றுஞ் சேயனையோன் வென்று. 307

பன்மணிக ளொன்றிப் பகலோன் கிரணமென
மின்னு முடியளித்தான் மேகத்தின்—மன்னவன்
வையத்து வேந்தற்கு வாழ்த்துப் பலகூறிச்
செய்யத் தகும்வரிசை செய்து. 308

பளிங்கு படிந்து பனிவரைகள் வானில்
ஒளிர்ந்த உயரிமயங் கண்டான்—குளிர்ந்த
விசும்பிற் பறக்கும் விமானத்திற் பாரின்
தசும்பொளிசே ரெல்லையதைச் சார்ந்து. 309

பூவுந் தளிரும் பொலியும் பொழில்சுற்றி
மேவு மியனதிதான் கங்கையோ—சேவக
என்றரசன் கேட்கவதற் கெந்திரத்தின் சாரதியும்
நன்றுரைத்தீ ரென்றா னயந்து. 310

மரிசியெந் தேவ குலத்து மகிபர்
விரிபூந் தலத்திடையே மேவி—அரியகடும்
மெய்த்தவத்தை யாற்றியிம் மேதினியைக் காக்கின்றார்
வித்தக ரென்றான் வியந்து. 311

மகிமைத் தலத்தருமே வந்தோம் வரிட்டர்
தகவுடைய தாள்கள் பணிந்து—மிகவிரைந்து
செந்திருவா ழென்னகரஞ் சேர்வோ மெனமொழிந்தான்
வெந்திறலோன் வேந்தர்க் கிறை. 312

கற்பகச் சோலையிது காண்பீ ரெனச்சொல்லிச்
சற்றதற் கப்புறத்திற் சாரதி—புற்றரையில்
எந்திரத்தை யுய்த்தவ் விறையை யிருத்தினான்
அந்தரத்தி னின்றிழிந் தாண்டு. 313

சிங்கத்தின் குட்டிநீ சீறிப் பயனென்னே
பங்கப் படாதிங்கு வாவெனக்கூய்—அங்கோர்
மழலை மொழிச்சிறுவன் மல்லன்போற் பற்றித்
தழுவியதை வீழ்த்தினான் சார்ந்து. 314

அதிசயமா மிக்காட்சி கண்ட வரசன்
விதியுண்டோ வாழ்விலினி மேலிக்—குதலைமொழிச்
செவ்வாய்ச் சிறுவனைப்போ லோர்மகவை யான்பெறவென்
றிவ்வா றினைந்தா னுளத்து. 315

வலது விழிதுடிக்கும் வாய்க்குங்கொ லிப்பே
றலதுபொய் மாயமிஃ தாங்கொல்—பலஞென்று
முன்னுறுமென் றெண்ணியெதிர் மோகனப்பூங் காவடைந்தான்
மன்னனப் பாலன் மருங்கு. 316

சிறுவனேத் தேடித் தவமாதர் சென்று
வெருவுற் றவனே விளித்தார்—வருவாய்
சருவ தமனப்பேர் நன்குனக்குச் சாலும்
பெருமுனிவ ரிட்டவதன் பேறு. 317

அருகி லவர்வந் தரசனேமுன் கண்டு
பெரியீ ரிவனஞ்சாப் பிள்ளே—வெருவந்த
செய்யாமற் சிங்கத்தின் குட்டிதனேக் காத்திடுவீர்
ஐயா வெனவிரந்தா ராங்கு. 318

சாந்தத் தவமுனிவர் சார்ந்த பெருஞ்சிறப்பு
வாய்ந்த தலத்திங்கு வாழ்சிறுவன்—பாய்ந்து
வனமிருகந் தாக்கல் வியப்பென்ருன் மன்னன்
சினமிகுந்த சேயருகே சென்று. 319

பாலனிவன் பாரிற் புருக்குலத்தில் வந்துதித்த
கோலப் புதல்வன் குறிக்கொள்வீர்—சீலத்
தவம்புரியுந் தேவியிவன் தாயிங்குவாழ
இவன்பிறந்தா னென்ருளோர் மாது. 320

பார்வைக் கெனும்மைப் போன்றுள்ளான் பண்புடையீர்
யாரைய நீரென் றவள்வினவப்—பார்மன்னன்
யாத்திரிகன் யானென்று கூறி யிவன்வரலா
ருச்சரிய மென்றுனு ளாழ்ந்து. 321

தெய்வ மெனக்குத் திருவருளைச் செய்காலம்
பைய வணுகிற்றே பாவியேன்—ஐயம்
பெரிதுடையேன் நெஞ்சேயிப் பீடுதவத் தார்மாட்
டறிதுமெனத் தேர்ந்தா னகம். 322

விண்ணுலக மேனகை பெற்ற மகளிவன்றாய்
மண்ணுலக வேந்தை மணக்கவவன்—புண்ணாக்கிக்
கர்ப்பவதி யானநற் காரிகையைக் கைவிட்டான்
இப்பரிசே யாமறிந்த திங்கு. 323

இன்ன பரிவா யியம்பினர் மென்மொழியார்
மன்னன் தரியான் மகிழ்ந்தெழுந்து—தன்மகனைப்
புல்லினன் பொய்யிலார் கண்டா ரவனுமம்
நல்லாழி மீதிலங்க நன்கு. 324

யாரிம் மனிதனிங் கென்னைமக னென்றழைத்தான்
பார்மன் துடியந்த னென் தந்தைப்—பேரென்
றெனக்குரைத்தா ளென்னம்மை யென்றனச் சேய்வெஞ்
சினக்குறிகண் காட்டச் சிவந்து. 325

துடியந்தன் யானியென் தோன்றலுனைக் கண்டேன்
கொடியேன் குறைமுடிப்பேன் மேலும்—படிமிசையே
பாவி யெனைமணந்த பங்கயத்து மெல்லியலாள்
தேவியவள் சீரடிமுன் வீழ்ந்து. 326

செல்வீர் தயவுடையீர் சென்று சகுந்தலைக்குச்
சொல்வீர் நிகழ்ந்தவற்றைத் தொல்குலத்திம்—மல்வீரன்
என்றோ டிருக்க விசைந்திட்டா னென்றவனைத்
தன்மடிமேல் வைத்தளித்தான் தார். 327

வேணி முடித்தசடை வீறு தவக்கோலம்
காணுந் தகவிற் கவினிளமை—வீணென்ற
தோற்ற முடையாள்தன் தூய தலைவியைக்கண்
டாற்ரு துயிர்த்தா னணைத்து. 328

கண்ணீர் சொரியக் கணவன்றன் பாதங்கள்
பெண்ணரசி பற்றவவன் பேதுற்றுத்—தண்ணளியாய்
தீராப் பழியுனக்குச் செய்தே னதைப்பொறுத்துத்
தாராய் கதியென்ருன் தாழ்ந்து. 329

விதியின் விளைவாலென் வாழ்வு குலைந்தென்
பதியின் பரிவை இழந்தேன்—இதுகாறும்
என்னவவள் தேம்பி யழக்கண் டிறைதுடைத்தான்
மின்னி விழியிறைக்கு நீர். 330

அன்றிழந்த ஆழி அவன்விரலிற் கண்ணுற்று
மன்றில் மறைந்தவணி தானிதுவோ—என்றரசி
கேட்கக் கிடைத்தநிது கண்மணியே உன்னைநினை
வூட்டுதற் கென்று னுவந்து. 331

தேவ முனிவர் திருவடியில் வீழ்ந்திறைஞ்சி
மாய வினைதீர்ந்து மாண்புறுவோம்—சேவகமுன்
சென்றங் கவர்தந் திருவுளத்தின் பாங்கறிக
என்றுன்பூ மன்ன னெழுந்து. 332

வருக வெனவழைத்து வாள்வேந்தற் காசி
குருமுனிவர் கூறியவன் றேவி—துருவாசர்
இட்டவொரு சாபத்தா லேத மடைந்ததைமெய்த்
திட்டியினுற் சொன்னுர் தெரிந்து. 333

தேவ முனிவநின் சீரடிகள் போற்றுதற்
காவலுடன் வந்தேற் களித்தாயென்—ஆவி
அனையாளை யானிழந்த ஆரமுதை என்தீ
வினையாவும் போக்கி விடுத்து. 334

என்றரசன் பூமி படிந்தான் இதயத்தில்
நன்றி பெருகியெழ நாத்தழும்பப்—பொன்றிகழும்
மேனியாள் வேதமுனி சேவடியிற் சேயோடு
தானிறைஞ்சி னுள்மருங்குத் தாழ்ந்து. 335

சிவாய நமவென்று செம்பொருளைச் சார்ந்தார்
பவமாயத் தீவினைகள் பாறிப்—புவியில்
பெருவாழ்வு துய்த்தல்போற் பெற்றுனில் வாழ்வு
திருமன்னன் தேவியுட னன்று. 336

இமயத் தொடுகுமரி யெல்லை யொளிர்நா
டிமையோரும் பாரதமென் றேத்த—உமதுமகன்
பாருதித்த தேவன் பரத னிதையாள்வான்
சீர்மிகத்தன் பேர்பிறங்கச் செய்து. 337

வாழியபொற் பாரத மென்றுரைத்தார் வான்முனிவர்
ஆழித் திரைசூ ழகலிடத்—தேழுலகும்
காணுத ஞானக் கதிகாட்டு மிந்நாடு
மாணுத மாயை துரந்து. 338

ஆசி யுரைத்த முனிவ ரடிவணங்கி
மாசிலாத் தேவியுடன் மன்னவன்—தேசவிரும்
மைந்தன் பரதனையும் கொண்டடைந்தான் மாநகரம்
எந்திரத்தில் வானூ டிவர்ந்து. 339

எதிர்கொண்டு மாந்தரங் கேத்தினு ரார்த்தார்
மதிகண்ட மாகடல்போற் பொங்கி—அதிசயித்தார்
வேந்தன் புடையரசி வீரக் குலத்துதித்த
ஏந்த லுடனிருக்க வேய்ந்து. 340

திக்கு விசயஞ் செயத்தொடங்கித் தேர்வேந்தன்
மிக்க விறல்படைத்த மைந்தனெடு—சொர்க்கம்
அனைத்தென்னும் தன்னுட் டடன்புரந்தான் பன்னு
டனைத்தும் ஒருகுடைக்கீழ் ஆண்டு. 341

பரதற்குப் பார்மகுடஞ் சூட்டத் திருநாள்
அருமறையோர் ஆராய்ந் துரைக்கப்—பெருமன்னன்
தன்முடியைத் தந்தான் தனையற் ககமகிழ்ந்தாள்
பொன்வடிவத் தேவியுளம் பூத்து. 342

மண்ணகத்து வேந்தர் மனங்களித்தார் மாதிரத்தில்
விண்ணகத்துத் தேவர் விதந்துரைத்தார்—கண்ணுவனார்
வந்தரசை வாழ்த்தினார் வையகத்தார் போற்றினார்
விந்தைச் சரிதம் வியந்து. 343

சகுந்தலை வெண்பா முற்றும்

---

தாதுதிரு மிளவேனில் தருமலரும் முதிர்பருவத்
தோதுபழத் தோடுளத்துக் கின்விருந்தும் வேண்டுதியேல்
பூதலமும் விண்ட.லமும் பொருந்துமொழி ஒன்றுளதேல்
ஈதனைத்து முறபொழிவேன் சகுந்தலையென் றொருநாமம்.

—ஜெர்மன் மகாகவி கொயிட்டே

# குறிப்புரை

இக் குறிப்புரை இராமநாதன் கழகத்தின் தலைமை ஆசிரியர் திரு. அ. சே. சுந்தர்ராஜ ஐயங்கார் அவர்களால் எழுதப்பட்டது. அவர்களுக்கு எனது நன்றி உரியதாகும். —நூலாசிரியர்

1. பொன்னுலகின்கோ-இந்திரன், ஏவல் குறிப்பு எற்கு இசைந்து அருள்க என்முன். எற்கு-எனக்கு.

2. கோசிகன்-விசுவாமித்திரன்.

3. அகலுள்-அகிலாண்டத்துள். வேட்டார்-வேள்வி செய்தவர். வை வேல்-கூர்மையான வேல். மதி-ஆலோசனை.

4. மாற்றம்-மறுமொழி. முன்னம்-உள்ளக் குறிப்பு. வேதமுனி-விசுவாமித்திரன். பிழைத்துப் பின் சீற்றம் பிழைப்பரோ. பிழைத்து-பிழை செய்து. பிழைப்பரோ-உயிர் பிழைப்பார்களோ?

5. முதலாமடி ஒட்டணி. புங்கவர்-உயர்ந்தோர். சங்கை-ஐயம்.

6. தானை-சேனை. கோசிகனும் உன்னைக் கண்டு காமக் கரைகாணுன் குறையிரப்பான், காணுன்-காணுனகி. உம்மை-உயர்வு சிறப்பு.

7. சேவகம்-தொண்டு. தென்றல்-செய்யுள் 18, 25 நோக்குக. தென்றலெனும் தேவு-தென்றலான், செய்யுள் 8.

8. வாளி-அம்பு. பா ஏறு தென்றல்-புலவர் பாக்களில் சிறப்பிடம் பெற்ற தென்றல்.

9. காவி-நீலோற்பலம்; இங்கு நிறத்தைக் குறிக்கும். கார் வேந்தன்-மேகங்களுக்குத் தலைவனான இந்திரன். கார்-மேகம்.

10. ஒருதலை-நிச்சயம்.

11. நிறை-மனோதிடம்.

12. கவின்-அழகு.

13. முல்லை-பல். ஐது அவிழும்-சிறிது-அகன்று விரியும். கோங்கு-தனம். பணை-மூங்கில்போன்ற தோள். காமர்-அழகு. பண்-இசை. பிறை-நெற்றி.

14. இவை-முல்லை. கோங்கு, பணை, குமுதம், பிறை என்பன முறையே பல், தனம், தோள், வாயிதழ், நெற்றி என இவ்வுருவகத்திற்குப் பொருத்தமாயின. சந்தம்-அழகு. சதிர்-நாட்டியம். மதன்-மன்மதன்,

15. அரதனம்-இரத்தினம். திருமின்-மின் போன்ற மேனகை. தரு-மரங்கள். அசும்பு-ஊற்று.

16. அரி-ஒலி. செறி-நெருங்கிய. ஆலித்து-ஒலி செய்து. கானத்திற்கு ஆன மெய்த் தாளம்.

17. போதமவிழ் யோகம்-சித்த விருத்திகள் அவிழ்தல் யோகசாதனையாகும். (பதஞ்சலி யோக சூத்திரம்) அகத்து முரல் கீதம் யோகிகள் தம்முள் கேட்கும் நாதவொலியைக் குறிக்கும்.

18. ஓர்தல்-நினைத்தல். வாசவன்-இந்திரன். விழிக்கும்-விழிப்பான்; செய்யுமென் முற்று.

19. மன்-கழிவிரக்கம். காமம்-ஆரம்ப நிலை; கவிதை-இடைப்பட்ட இன்ப அனுபவம். பண்டை வினை-முடிவு.

20. முதல் இரண்டடிகள் ஒட்டணி. சுவறி-படிந்து. குமைத்திட்டேனுக்கு இன்னும். குமைத்தல்-அழித்தல்.

21. முனிந்தான்.கோபித்தான். சென்னி-தலை. கோதை-அவிழ்ந்த குழல்-அன்மொழித் தொகை; ''நெறிந்த குழல் நின் னிலைமை கண்டும்'' (கம்பராமாயணம்) என்பதை நோக்குக.

22. தன்னுற்றான்-தண்ணிமையுற்றான்; தாழ்ச்சியுற்றான். தண்ணிமை-தாழ்வு. ''வல்வினையால் எண்ணுறாத் துன்பமுறும் இவ்வுயிர்கள் தண்ணிமையைக் கண்டிருக்கமாட்டாமற் கண்கலங்கும் மாறனருள்'' என்பதை நோக்குக. (திருவாய்மொழி நூற்றந்தாதி: 39.)

23. எவன்-ஏன்?

24. அன்ன நடை-அன்மொழித்தொகை. எழும்-எழுவாள்; செய்யுமென் முற்று.

25. ஒல்கி-அசைந்து. வேணி-கூந்தல். ஆகடியம்-பரிகாசம்; குறும்புத்தனம்.

26. ஆண்டகை-ஆண்தகை; விளி.

27. நாண் குலைத்த மாருதம். நாணத்தைக் குலைத்த காற்று. அங்கி-நெருப்பு. மருங்குல்-இடை.

28. ஊன்-உடம்பு.

29. கன்னல்-கரும்பு. இங்கிதம்-இன்பக் குறிப்பு.

31. இதுவும் அடுத்த செய்யுளும் இரவு வருணனை. ஆகண்டலன்-இந்திரன். உடு-நக்ஷத்திரம். இந்திரனுடைய ஆயிரங் கண்கள் நக்ஷத்திரங்களுக்கு உவமானம். பாசம் இருளுக்கு உவமானம். சாயுமதி-அத்தமன சந்திரன். தேசு-ஒளி. கங்குல்-இருள். ஆணவம், மாயை, கன்மம் என்ற சைவ சித்தாந்தக்

கருத்துக்கள் இங்கு ஆளப்பட்டுள்ளன. இரவின் இருள்-ஆணவம். நக்ஷத்திரங்கள்-மாயை. மின்மினி-கன்மம்.

32. ஈட்டம்-கூட்டம்.

33. இரு விசும்பு-தேவருலகம்.

34. உன்னடியை..........ஆற்றிட 'மதனேவற்றுனை சூழ் கோமளமே' (6) என்பதனோடு ஒப்பிடுக.

35. இருடியர் கோன்-கோசிக முனிவன். பருதி-சூரியன்.

36. சூரியோதய வருணனை. பாசிலை-பசிய இலை. கூஉய்-கூவி.

37. எல்-பகல்.

38. உடல் நைந்து. இகம்-இவ்வுலக அனுபவம் முதலியன. உருவடைவ தொன்றோ வியப்பு-யோகிகள் பெறும் அட்டமாசித்திகளுள் ஒன்றை இது குறிக்கும்.

39. வாள் தடம் கண் மங்கை. கம்பராமாயணம் அயோத்தியா காண்டம் குகப் படலம் 23 ஆம் செய்யுளோடு ஒப்பிடுக.

40. காதிமகன்-விசுவாமித்திரன். அற்பிதம்-அர்ப்பணம்; செய்யுள் விகாரம்,

42, கரைந்த-புகழ்ந்த. துங்கம்-உயர்ச்சி.

43. வாழ்க்கை விமரிசனக் குறிப்பு. செய்வார்-செய்பவர்கள், பேச்சு மேவுதல் போல நினைத்த வெலாமாகும் என முடிக்க. முற்றுக அடக்கியவர் எதை எதை நினைந்தார் அவையெலாம் ஆகும். நினைந்தவெலாம்-எழுவாய்.

45. புறவு-முல்லை நிலம்.

47. சாலம் இஃது என் என்று. சாலம்-ஜாலம்.

48. புரை-குற்றம்.

51. துறக்கம்-சுவர்க்கம்.

52. மம்மர்-துன்பம்.

57. போதம்-ஞானம்.

50. காத்து அவற்கு (அவனுக்கு) தந்த பெருமையுறு புட்கள் தமை ஓர்ந்து. புட்கடமை என்றும் கொள்ளலாம்.

60. ஆசி-வாழ்த்துரை.

63. வளர்ந்த ஆறு இது என ஒரு சொல் வருவிக்க.

64. போல் நுடங்கி. கன்னி பாரிற் பிறந்து அடைந்து பொன்னின் வடிவாய் மதனிழைத்த சிற்பம்போல் பொலிகின்ருள் என்க. பொலிகின்ருள்-அழகுடன் விளங்குகின்ருள்.

65. அமுதம்-தண்ணீர்; 'கங்காமிர்தம்' என்னும் வழக்கு நோக்குக. இந்துக் குலம்-சந்திர குலம். புரம்-நகரம்.

66. மாற்ருர்-பகைவர்கள். நகர் அஃது என்று ஒரு சொல் வருவிக்க.

67, கடி-காவல். துடி-உடுக்கை. அரங்கு-நாடக அரங்கு. பொற்பு-அழகு; அலங்காரம்.

69. அகல்-நிலப்பரப்பு. வழியின் நிற்பர்.

70. அற்பு-அன்பு. பெற்றெடுத்த மக்களை மேன்மக்களாய் மாண்புறச் செய்வர் என்க.

71. வியன் நாடு-அகன்ற நாடு. குலத்தில் குணம் வளருமாபோல் நாட்டின் விளைவு தழைக்கும் என்று கொள்க. இல்-இல்லை.

72. பிறங்க-விளங்க. படி-பூமி.

73. அமர்-போர். தழல் அங்கை தாங்கும் திறலோனாகிய மழவிடையோன்-சிவபெருமான். அவன் அளித்த முருகு-முருகக் கடவுள். மன்பதையோர்-மக்கள்.

75. இராமநாத வள்ளலின் புகழ் சென்றவிடமெல்லாம் துடியந்தன் செங்கோல் சென்றது. கம்பர் சடையப்ப வள்ளலையும் வில்லிபுத்தூரர் வரபதியாட் கொண்டானையும் புகழேந்திப் புலவர் சந்திரன் சுவர்க்கியையும் தம் நூல்களுட் பெய்துரைக்கும் தமிழ் மரபுபற்றி இராமநாத வள்ளல் புகழைக் குறிப்பிடுகிறார் அவர்தம் மருகராகிய இவ்வாசிரியர். சீர்த்தி-புகழ். புலம்-இடம்.

77. வென்றி-வெற்றி. ஏர்ப்பு-ஆராய்ந்துணர்கை.

78. சேல்-மீன். ஓலக்கம்-சபை. சாலி-நெல், அடவி. காடு. கான் மிருகம் சாலிப் பயிரை அழிப்பன என்றனர்.

79. மரை-ஒரு வகை மான். மா-மிருகம். ஆலித்து-ஆரவாரஞ் செய்து.துரகம்-குதிரை. துரகப்படை ஆலித்துப் பின்னே தொடர்ந்த என்க.

81. காம அநுராகம்-காம உணர்ச்சி; வடமொழிச் சந்தி.

82. பூக்கதிர்கள்-அழகிய கதிர்கள். குரிசில்-வேந்தன்.

83. அடவி-காடு. எல்லை அரணில் தங்கி-காட்டின் எல்லைக்குட்பட்ட அரணிலே தங்கி.

84. வைகறை-அதிகாலை.

85, கதம்-கோபம். அதர்-வழி. பரி-குதிரை, துதைந்து-நெருங்கி.

87, புனித வரம்பு-'கொல்லாநற் கொள்கையார்' வாழும் எல்லை நிலம்,

88, கூற்று-யமன்

89. நாள் வேட்குநர்-ஒவ்வொரு நாளும் வேள்வி செய்ப வர்கள்.

90. வயின்-இடத்து.

91. தனையை-மகள்.

92. புரவலன்-அரசன். சமித்து-ஓமத்திற்குரிய அரசு, பலாசு, மா முதலியவற்றின் சுள்ளிகள். ஈண்டு-இப்பொழுது.

93, தேர்ப்பாகனை நோக்கி.

94. உலவாக்கிழி-எடுக்க எடுக்கக் குறையாத நிதிப்பொதி.

95. சூழ்வு-சூழல்; இடம்.

96. வன்னம்-நிறம்; அழகு. வர்ணம் என்பதன் விகாரம். முன்றில்-முற்றம்.

97. மன்றுட-மன்றத்தில் ஆட. நக-சிரிக்க.

98, வான்பயிர்-மாரிக்காலத்தில் விளைந்த பயிர்.

101 கேழ்-ஒளி.

102. பன்னி மொழிதல்-நின்று நின்று பேசுதல்.

103. வலந் துடித்த-வலது கண் தோள் முதலியன துடித்தன.

104. நேடு-தேடு.

105. சங்கை-ஐயம்.

106. மால்-மயக்கம்.

108, அவா-ஆசை. காளிதாசர் கருத்து.

109. ஒல்லை-விரைவில். தாது-மகரந்தம்.

110, ஏன் .... உளன்-நாடக விகற்ப அணி.

112. தருணம்-சமயம்; சந்தர்ப்பம்.

114. ஏய்ந்த-இயைந்த.

115. அறுவை-ஆடை. ஆகம்-உடம்பு. பூவேள்-பூவுலகத்து மன்மதன்.

117. வதுவை-மணம்.

118. பார்த்திவன்-அரசன்

119. இயமம்-புலனடக்கம்; யோக அங்கங்களுள் முதலாவது. ஏர்-ஒப்பு. மாற்றம்-விடை.

120. அரச இருடியாகிய அவரை அணுகி. அணுகியவள் மேனகை.

122. இகம்-இம்மைப்பயன். இத்தலத்தின் தூய நெறி-இந்த ஆசிரமத்திற்குரிய தூய்மையாகிய ஒழுக்கம்.

123. மன்றல்-திருமணம். நேர்ந்துள்ளார்-நிச்சயமாக அறிந்துள்ளார்.

124. கோது-பயனற்ற சொற்கள்,

125. வேந்தன் தன்னுள்ளே நினைப்பான்.

126. அங்கி-அக்கினி. விஞ்சை மகள்-தேவகுலப் பெண். கஞ்சம்-தாமரை. விண்மலராகிய வாடாத தாமரை போன்ற முகம். பொரு-ஒப்புப் பொருள். வது-மணமகள். வதூ என்பதன் குறுக்கம். 'வதூ வரர்' என்னும் வழக்கு நோக்குக. வரிக்க-மணக்க

128. வேந்தன் நல்வேட்டையால்.

129. எழில் நலத்தார். எழில்-அழகு. குறைவை நிறைவாக்குவோம்.

130. அவதி-துயர்; யானையால் ஏற்பட்ட ஆபத்து.

132. நைந்து-மனம் வருந்தி.

133. காணவிலே-காணவில்லை. விகாரம். விடுத்து-கைவிட்டு. வியன்கான்-பெரிய காடு. அன்று அமர்ந்து அரணை அடுத்தான். அடுத்தல்-சேர்தல்.

134. இது சூரியாத்தமன வருணனை. அந்தி-சந்தியா காலம். மயங்குதலாவது பகலும் இரவும் மயங்குதல். அதனை-அடிவானத்தை.

135. வாள்-ஒளி. சூரியன் மறைந்தான்; இவன் ஆழ்ந்தான்.

136. கங்குல்-இரவு. கானின்மீதெழுந்து மன்னவன் தங்கிய அரணின் கண்ணே படர்ந்த முல்லை நிலவில் அலர்ந்து தென்றல்மீது மணத்தைப் பரந்தளிக்கும் என்க.

137. தவத்தினர்பால் மீண்டு மங்கையை அடைதல் மதியைக் கொண்டுவருவ தொக்கும். கவன்று-வருந்தி.

138. மங்குவது அதுபோல என விரிக்க.

**139.** ஆர்வலர்-பக்திமான்கள். மையல் மிகுந்து அவசம் மேலிட்டுத் தன்னை முற்றும் இழந்தான். உவமையின் பொருட் பொருத்தத்தை உய்த்துணர்க.

**140.** பவம்-முன்சென்மம்.

**143.** விக்கினம்-இடையூறு. மங்கலங்கள்-சோபனம். புங்கவர்-முனிபுங்கவர், புங்கம்-உயர்ச்சி.

**145.** வன்னி-அக்கினி. அவிசு-தேவருணவு.

**146.** புனித நதிக்கரையிலுள்ள பூம் பொழிலை நாடிப் புகுந்தான். புனிதம்-நீரின் தூய்மை. தீம்புனல்-சுவையின் இனிமை. தீர்த்தக்கரை-நீராடு துறைகள் உள்ள கரை.

**147.** கோங்கு-கொங்கை. காவி-கண். முல்லை-பற்கள். காந்தள்-கை இவற்றைக் காட்டின. பூ இயல்- அழகிய பண்பு, பூக்களின் பண்போடு விளங்கும் இயல்பு. மேனி-கொம்பு.

**149.** முன்றில்-முற்பக்கம்.

**150.** திப்பியம்-திவ்யம்; மேன்மை. சிந்தாகுலம்-மனத் துயரம்.

**151.** சாம்புவேன்-சோர்வேன். மற்று-பிறிது.

**152.** பாசிலை-பசுமையாகிய இலை.

**153.** உடல் நைந்தாய். நிறை-மனஉறுதி. அழிந்தாய்-வினையாலணையும் பெயர்.

**157.** புடைநெகிழ-ஒரு பக்கம் ஒதுங்கி நிற்ப, தளர.

**158.** வேந்தர் அளி செய்யாரேல் நீங்கள் எனக்கு நீர்க் கடன் முதலியன செய்ய வேண்டும். தான் இறப்பது திண்ணம் என்று கூறுகின்றாள். அளி-அருள்.

159. சொன்னம்-சுவர்ணம்; பொன்.

160. மரை-தாமரை. பாசடை-பசிய இலை. தூது சொலும் ஓர் பாவை-தூது அமைந்த ஒரு பாசுரத்தை. பா-பாட்டு. செவ் உகிர்-சிவந்த நகம்.

161. அணி-செய்யுள் அணிகள்.

162. ஆதமிலி-ஆதரவற்றவன்.

164. திருக்கோவையார் செய்யுள் 12 நோக்குக.

165. இன்று எனக்கு இன்னற்படாது இருக்கும் பதமளித் தாய்.

166. விதி-கட்டளை.

168. இந்து குலம்-சந்திரகுலம்.

170. வலிந்து-வற்புறுத்தி.

172. கமலப்போது ஆம் அடிகள். போது-மலர்.

173. என் பாதுகாப்பாகிய அவர் மொழி கடவேன்.

174. ஏதம்-குற்றம்.

175. கேழ்-நிறம்; இங்கு செந்நிறம்.

177. வயிரத்தின் ஒளி வீசும். மினும்-மின்னும்.

178. மேல் நாள்.

180. புரந்திடுக-காப்பீராக.

182. ஏசற்று-துன்புற்று.

184. வன்புறை-உறுதி மொழி. விழிமுத்து-கண்ணீர்.

185. சகவாழ்வு-இல்வாழ்வு.

186. மான் கன்று திங்கட் பிறைகண்டு துள்ளி வர என்க.

187. மால்-மயக்கம்; மனக்கலக்கம்.

189. கண்ணீருகுக்கும்.

190. கன்றி-மிருந்து.

191. சேமவரம்-சேமஞ்செய்யும் வரம்; சாபவிமோசனம்.

192. ஆழி-மோதிரம்.

193. தாபம்-மிக்க மனத்துயரம்.

194. பொறை-மன அமைதி; பொறுமை.

196. வில்லம்பிற்குத் தப்பினுலும் அதன் அதிர்ச்சியால் நினைவு பிழைத்தது; அதனுல் சகுந்தலையையும் மறந்தான்.

197. கொன்னே-வீணே.

198. மாளாது உய்ய. உய-விகாரம்.

203. ஞானத் தபோதனர்-கண்ணுவ முனிவர். தெய்வம்-ஊழ்வினை.

204. அவன் தாமதித்தும்.

206. வேட்டு-வேள்வி செய்து. பாச இருள்-பாசமாகிய இருள். இருள்-மயக்கம். குலபதி-கண்ணுவ முனிவர்.

207. அனுசர்-சகோதரர். உய்க்க-சேர்க்க. சூழ்ந்து-ஆராய்ந்து.

209, அலங்கல்-மாலே ஒப்பனே-அலங்காரம்.

214. சந்தனக் கா-சந்தனமரச் சோலே.

216. பினர்-பின்னரே, பெற்றி-விரதம்.

218. துன்று-நெருங்கிய.

221. வேதிகை-திண்ணே; பீடம். ஏமம்-சேமம்; காப்பு. வாமம்-அழகு.

226. கண்ணீர்...புண்படும்-கண்ணீர் பாதையை மறைத்தலாற் காலிடறிப் புண்படும்.

228. கேளேன்-உரிமையில்லாததைக் கேளேன்.

229. இணேயோர்-சமானமானவர். இங்கு அரசனுடைய வேறு மனேவியரைக் குறிக்கும்.

230. பணியினர்-பணியாட்கள். இறுமாப்பு-செருக்கு.

231. கால் நனேத்து-கண்ணீராற் கால் நனேயும்படி விழுந்து வணங்கி.

233. பேர் ஆதரம்-மிக்க வாத்சல்யம். (அன்பு). போது-மலர்.

235. உவா-பூரணசந்திரன்.

236. நேர்ந்த வண்ணம்; விகாரம்.

237, இனி 'எப்பொழுது' என்று ஒரு சொல் வருவித்து முடிக்க.

249. மாலினி-நதி. கணவற்றேடி-கணவனைத் தேடி.

240. ஆலித்து-ஆரவாரஞ் செய்து. சாயல்-மென்மை. தொகை-தோகை; செய்யுள் விகாரம்.

241. சோமகுலம்-சந்திர குலம்.

242. மட்டு-தேன்.

243. சுறங்கு-காற்ருடி. பேய்த்தேர்-பாலை நிலத்தில் காற்றினுலே தேர்போலச் சுழலும் தோற்றம். கானற்சலம்-பாலை வனத்தில் தோன்றும் வெறுந் தோற்றமாகிய நீர்.

244. கனல்-மிக்க வெப்பம். தடம்-வழி. இளைந்து-வருந்தி.

246. சோமன்-சந்திரன். தீர்த்தம்-சோமகுண்டம்.

247. ஆழி-மோதிரம்.

248. கன்னல்-கருப்பஞ்சாறு. ஆதுலர்-வறியவர்,

250. சொன்ன கிரிச் சிகரம்-பொன்மலையின் முடி. புரி-நகரம்.

251. கல் நவில்தோள். நவில்-போன்ற.

253, நாரியர்-பெண்கள். அவர் வாழ் மாளிகை அந்தப்புரம். மால்-அறிவின் கலக்கம்.

254. விமரிசனக் குறிப்பு. தேட்டம்-கவலை, ஆவல். காளிதாசர் கருத்து.

255. கஞ்சுகன்-சட்டை யணிந்த மெய்காப்பாளன். கஞ்சுகம்-சட்டை: அதை அணிந்தவன் காஞ்சுகி. செய்யுள்விகாரம். முறை மன்றம்-முறையிடு செய்யும் மண்டபம். செவ்வி-காலம்.

257. கனஞ் செய்ய-மரியாதை செய்ய. அண்மித்து-அணுகிச் சென்று.

259. தெய்வ மணம்-கந்தர்வ மணம். ஆக்கம்-வாழ்வு. திரு-திருமகள் போன்றவள்.

260. விடுத்தான்-நோக்குவதினின்றும் விடுவித்தான்.

261. வரித்தல்-விரும்புதல். ஆகம்-இதயம், உடல்.

266. கண்டு-கற்கண்டு. கற்கண்டு போன்று இனிய சொல்லை யுடையவளே. வெண் திங்கள் வஞ்சத்தவற்கு-சந்திர குலத்திலே தோன்றிய அரசனுக்கு. வம்சம் என்பது வஞ்சம் எனத் திரிந்து அவன் வஞ்சகத்தையும் குறிப்பாகக் காட்டியது. கஞ்சம்-தாமரை.

271. சான்று-சாட்சி.

277. பூமன்-பிரமன். புத்தேள் மன்-தெய்வத்தன்மை வாய்ந்த முனிவன்.

278. சார்பு-சாரல்.

279. ஆவிசோர்ந்தாள்: சகுந்தலை; வினையாலணையும் பெயர்.

230. காசினி-உலகம். சூள்-சபதம். (178)

231. பிலிற்றும்-சொரியும்.

282. வண்ணம்-வர்ணம்; நிறம். கா. சோலை. வைகி-வசித்து.

283. ஒரை-இரண்டரை நாழிகை கொண்ட கால அளவு, பன்னியர்கள்-பத்தினிமார்கள்.

284. இருந்தவத்தோனாகிய மரீசி என்க.

295. வசந்தவேள்-மன்மதன். எழில்-அழகு.

286. வியன் நகரம். நகர மாந்தர். வியன்-பெரிய.

287. மனன்-மன்னன்.

288. ஏதிலான்-அன்னியன்; வறியவன்.

289. ஒற்றர்க்கு உடனுரைத்தார்.

299. உய்த்து-உள்ளே தள்ளி.

291. பேதையோன்-இங்கு மீன் விலைஞன்.

294. செய்யுள் 267 பார்க்க.

296. வெருவந்த-அச்சந்தரும்.

207, ஈடு-ஒப்பு. உவடுவான்-வெறுப்பான்-

298. முனர்-முன்னர்.

390. ஆரணம்-வேதம். தேசு-ஒளி.

301. ஏக்கம் குறையாதவன் ஆயினன் என்று ஒரு சொல் வருவிக்க.

302. கார் மன்னன்-இந்திரன். கணித்து-மதித்து.

304. பூவேள்-பூமிக்குத் தலைவன்,

307. சேய்- முருக வேள்.

308. தசும்பொளி-பொன்னொளி.

310. வியன் நதி-பெரிய நதி.

312. வரிட்டர்-மேலானவர். வரம்-சிரேட்டம்.

313. புற்றரை-புல்தரை. ஆண்டு-அப்பொழுது.

314. பங்கம்-ஊறு. மல்லன்-மற்போர் வீரன்.

317. முன்னுறும்-விரைவில் நிகழும். மோகனம்-பேரழகு.

317. தமனன்-அடக்கி ஆள்பவன்.

321. உள்ளே சூழ்ந்து.

324. அவன் நாமம். நாமம்-பெயர்.

327. தார்-மாலை.

330. பரிவு-அநுதாபம்.

334. மெய்த்திட்டி-ஞானதிருஷ்டி.

338. துரந்து-அகற்றி.

339. தேசு அவிரும்-ஒளி மேன்மேலும் விளங்கும்.

341. அனைத்து-போன்றது.

343. மாதிரம்-திசைகள். எல்லாத் திசைகளிலுமுள்ள தேவர்கள்.

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 20 | மகும | மாகும் |
| 37 | 15 | தளரியலாள் | தளிரியலாள் |
| 42 | 21 | சுகங்குழைந்தங் | ககங்குழைந்தங் |
| 44 | 18 | காண்பேன்யான் | காண்பேன் |
| 46 | 18 | மெவியர | மேவியர |
| 52 | 9 | நகர்க்கதிபன் | நரர்க்கதிபன் |
| 56 | 18 | னூடேவுயிர் | னூடே வுயிர் |
| 66 | 6 | தலத்தருமே | தலத்தருகே |